குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ] சித்தார்த்தி ஆண்டு ஆனித்திங்கள் 10—7—79 [ இதழ் 8



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

## அருள்வாக்கு

—★—

உரை இறந்த பேரின்ப
உல்லாச வீட்டில்
திரை இறந்து தூங்கித்
திளையேன் — வரை பெருகப்
பேசுவேன் யான்என்றே
பெற்றவர்தம் உள்ளத்துக்கு
ஆசுவே சொக்கநாதா.

— சொக்கநாத வெண்பா. 54


ஆசிரியர் :-

வித்துவான்

**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

**சி அருணைவடிவேல் முதலியார்.**



உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

**தருமையாதீனத் திங்கள் இதழ்**

| மலர் 38 | 10-7-79 | இதழ் 8 |
|---|---|---|


## உட்பொருள்





உ
குருபாதம்
# ஞானசம்பந்தம்
மலர் 38 | சித்தார்த்தி - ஆனி - 10—7—79 | இதழ் 8

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## நமது குலதெய்வம்

### குழப்பமும் தெளிவும்:

செந்நெறி, சிவநெறி, நன்னெறி என்றெல்லாம் உலகத்தவர்களால் பாராட்டப்பெறும் பெருஞ்சிறப்பு, தொன்மைமிக்க நம் சைவசமயத்திற்கே உரியது. சைவசமயத்தின் முழுமுதற் கடவுளாகத் திகழும் சிவபரம்பொருளின் அளப்பரும் கருணையினை நம்மவர்களுக்கு வாழ்வாலும் வாக்காலும் விளக்கியருளிய பேரருளாளர்களே ஆசாரியர்களாகக் கொள்ளத்தக்க நால்வர் பெருமக்கள். ஆராய்ச்சி என்ற பெயரால், சைவ சமயத்தின் தோற்றத்தைக்காண முயன்றும், சைவத்தைத் தோற்றுவித்தவர் இன்னுர் எனப் பொருத்தமற்ற முடிவு காட்டியும், சைவத்தின் உயிர்நாடிக் கொள்கை இன்னது என்பதனைச் சாத்திர தோத்திரங்கள் தெளிவாகக் காட்டியிருக்க, அதனை உணர்ந்தும் உணராதார்போலத் தமக்குத் தோன்றியவாறு பலபடக்கூறியும் சைவ சமயம் பற்றித் தாமும் குழம்பி, மற்றவர்களையும் குழப்பியவர்கள் பண்டும் உண்டு. இன்றும் உண்டு. இவர்கள் தோற்றிய குழப்

பங்களை கி. பி. ஏழாம் நூற்றுண்டில் தெளிவித்தவர்கள் ஞானசம்பந்தரும், அப்பரடிகளும் ஆவர். 13-ஆம் நூற்றுண்டில் மெய்கண்டாரும் அருணந்திசிவமும் ஆவர் இக்காலத்தில் தோன்றியுள்ள குழப்பங்களை நீக்கித் தெளிவுகாணவேண்டிய கடமையும் பொறுப்பும் சைவர் அனைவர்க்கும் உண்டு.

**சில ஐயப்பாடுகள்:**

உலகத்தோற்றத்தோடு, வேதமும் வேதவழிப்பட்ட சிவநெறியும் தோன்றின என்பதையும், வேதம்பற்றிய குழப்பங்களை நீக்கித் தெளிவாகச் சிவநெறியினை உலகுக்கு உணர்த்திய முதலாசிரியர் திருஞானசம்பந்தர் என்பதையும் சென்ற இதழில்தெளிவுபட விளக்கியுள்ளோம். வேதத்தை எளிமைப்படுத்தி விளக்கிய ஆகமம்போல, ஞானசம்பந்தர் அருளிய சமய வழிபாட்டு முறைகளுக்கு விளக்கங்களைத் தெளிவுபெற விரித்துக்கூறிய பேரருளாளர் திருநாவுக்கரசு சுவாமிகள். எனவே, திருஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும் சைவ சமயத்தின் முதல் இரு ஆசாரியர்களாகப் போற்றுதல் மரபாக இருந்துவருகிறது. அங்ஙனமாயின் இவ்விருவருமே போதுமானவர்களாக இருக்க மூன்ருவதாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் இணைத்துக்கொள்வது ஏன்? அவர்களையும் முதலிரு ஆசாரியர்களோடு ஒப்பவைத்துப் போற்றுவது எதனுல்? அங்ஙனமாயின் அவர்களை ஆசாரியராகக் கொள்வதா? அன்றிப் பிறவாறுகொள்வதா? என்றெல்லாம் எழும் பலவாய ஐயங்களை ஆராய்ந்து முடிவுகாண்போம்.

**சேக்கிழார் திருவுள்ளம்:**

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவவதாரத்திற்குக் காரணம், கயிலாயத்தில் கமலினி, அநிந்திதையாரிடம் அவர்கொண்ட காதல் விருப்பமேயாகும். அக்காதல் விருப்பத்திற்குக் காரணம் கூறுகின்ருர் சேக்கிழார் சுவாமிகள்.

“மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத்
தீதிலாத் திருத் தொண்டத் தொகைதரப்
போதுவார் அவர்மேல் மனம் போக்கிடக்
காதல் மாதரும் காட்சியில் கண்ணிஞர்”

நீண்டபெரும் தவம் செய்த தென்னுடு வாழ்வு பெறவே, சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவவதாரம் நிகழ்ந்தது என்கிருர். சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வருகைக்கு முன்னரே, தென்னுட்டுத் திருமணணில் அவதரித்து, புறச்சமயங்களைத் தடிந்து சைவப்பயிர் வளர்த்த பெருமை திருஞானசம்பந்தருக்கும், திருநாவுக்கரசருக்கும்

உரியது என்பதனை நன்கு உணர்ந்திருந்தும் சேக்கிழார் சுவாமிகள் இவ்வாறு அருளியது எதனால் என ஐயம் எழுவது இயல்பே. முதல் இரு ஆசாரியர்கள் வரவால் தென்திசை வாழ்வு பெறுததுபோலவும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் வருகையால்மட்டுமே அது அதனைப் பெற்றது போலவும் அருளிய சேக்கிழார் சுவாமிகளின் திருவுள்ளம் என்னவாக இருக்கும் என்று அறிய விரும்புகின்றோம்.

**நமது குலதெய்வம்:**

சேக்கிழார் சுவாமிகளே பெரியபுராணத்தில் வேறோர் இடத்தில் இக்கருத்தை மீண்டும் வலியுறுத்தியருளுகின்றார்.

"நேசம் நிறைந்த உள்ளத்தால் நீலம் நிறைந்த மணிகண்டத்து
ஈசன் அடியார் பெருமையினை எல்லாஉயிருந் தொழஎடுத்துத்
தேசம்உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்"

சிவனடியார்களுக்குச் சிவனன்றிப் பிறதெய்வம் ஏதும் இல்லை. அங்ஙனமிருந்தும், கி. பி. 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மாதவச்சிவஞான சுவாமிகள் காஞ்சிப்புராணத்தில்,

"ஒருமணத்தைச் சிதைவுசெய்த வல்வழக்கிட்டு
ஆட்கொண்ட உவனைக்கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாளன் எல்லாம்உய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்
பேரருளின் பெருமாளென்றும்
திருமணக்கோலப்பெருமாள் மறைப்பெருமாள்
எமதுகுல தெய்வமாமால்"

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தமது 'குலதெய்வம்' என்றும் குறித்தருளுகின்றார். இவ்வாறெல்லாம் புகழப்படும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சைவ சமயத்தில் உரிய இடம் யாது என்பதைச் சிந்திப்பது பெரிதும் வேண்டத்தக்கது.

**சைவத்தின் வழிகாட்டி :**

சமயம் என்பது வெறும் புறவழிபாட்டுடன்மட்டும் நிறைவுபெறும் ஒன்றன்று. சமயவாழ்வு வாழ்வார்க்குச் சமூகத்தில் சில இன்றியமையாத கடமைகளும் பொறுப்புக்களும் உண்டு. பிறந்த குடிவரவும், சமூக ஏற்றத்தாழ்வுகளும் எப்படி இருந்தாலும் தத்தம் நிலைமைக்குத் தக 'ஒல்லும் வகையான் அறவினை' செய்து வாழ்ந்த பெரியோர்கள்

வரலாறு நமக்குப் படிப்பிணை தரவல்லது. சமயத்துறையில் இருப்பவர்கள் எப்படி வாழவேண்டுமென்று வாழ்ந்துகாட்டிய அருளாளர்கள் அறுபத்துமூவராகிய சீரடியார்கள். அவர்களையும், அவர்கள் செய்த செயற்கருஞ்செயல்களையும் முதன்முதல் தாமருளிய திருத்தொண்டத் தொகை என்ற பதிகத்தால் நமக்கெல்லாம் அறிவுறுத்திய பெருமைக் குரியவர்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகளே. காட்டின் நடுவிடத்தில் தாகத்தால் நாவரண்டுநிற்கும் ஒருவனை, இவ்வழியே இவ்வளவு தூரம் நடந்தால் இனியநீரோடை ஒன்று உண்டு என்று கூறி, அங்கு விரைந்துசென்றால் உன் தாகம் தணியும் என்று வழிப்படுத்திய கருணையாளன் ஒருவனைப்போல், திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் போன்ற சீரடியார்களை நாம் அறிந்து உய்யவழிகாட்டிய பெருமையால் சுந்தரமூர்த்தி சுவாமிகள் நம் சைவ சமயத்தின் வழிகாட்டியாக விளங்குகின்றார்கள். அதனால் நாமும் நமது குலதெய்வமாகப் போற்றுகிறோம்.

**அகச்சான்றுகள் :**

தாம் அருளிய திருத்தொண்டத் தொகையில்,

" வம்பரு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன் "

எனத் திருஞானசம்பந்தரையும்,

" திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரையன்றன் அடியார்க்கும் அடியேன்"

எனத் திருநாவுக்கரசரையும், தாமும் வணங்கி, நாமும் வணங்க வேண்டுமென அறிவுறுத்திய பெருமைகருதியே சேக்கிழார் சுவாமிகள்,

" தீதிலாத் திருத்தொண்டத்தொகைதரப் போதுவார் "

எனவும்,

" தேசம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன்
பணித்த திருவாளன் "

எனவும், தம் வணக்கத்திற்கும், வழிபாட்டிற்கும் காரணம் இது என விளக்கியருளுகின்றார்.

**நடந்து காட்டிய பண்பு :**

அறுபத்துமூவரை நமக்கு அறிவுறுத்தி, இவர்களை வணங்குங்கள்; இவர்களே எல்லாம் என்று நமக்கு அறிவித்த சுந்தரமூர்த்தி

சுவாமிகள், தாம் அறிவித்ததோடு அமையாது தாமே வாழ்ந்துகாட்டி நம்மை உணரவைத்த திறம் நினைந்து போற்றத்தக்க சிறப்புடையது. ஆசாரியர்கள் இவர்களே என அறிவித்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர்கள் வாழ்க்கைவழிநின்று பேறுபெறுவதுமட்டுமன்றி, அவர்கள் வாக்கின்வழிநின்றும் உய்தி பெறலாம் எனக் காட்டியருளுகின்றார்.

" நல்லிசை ஞான சம் பந்தனும் நாவினுக்கு
அரையனும் பாடிய நற்றமிழ்மாலை
சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை "

என்ற திருப்பாடல் வரிகள் நினைந்து மகிழத்தக்கன. தாம் ஆசாரியப் பெருமக்களாகக் கருதிப் போற்றிய திருஞானசம்பந்தர் அவதரித்து அருள்பெற்ற சீகாழித் திருத்தலத்தைக் காலால் மிதிப்பதும் பிழை என்று கருதி நகரையே வலம் வந்ததும், திருநாவுக்கரசு சுவாமிகள் திருவருள் பெற்ற திருவதிகை வீரட்டானத் தலத்தினும் அவ்வாறு அஞ்சி ஊரின்புறத்தே சித்த வடமடத்தில் தங்கியதும் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் ஆசாரிய பக்திக்குச் சான்றுகளாகின்றன. ஆசாரிய மூர்த்திகள்பால் காட்டும் அளவற்ற மரியாதை கண்டு ஐயனே மனம் மகிழ்வான் என்பதையும் இவ்வரலாறுகள்விளக்குகின்றன. சீகாழியை மிதிக்க அஞ்சிய பண்பாடு கண்டு இறைவன் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குக் காதில் வெண்குழையனாகக் காட்சி கொடுத்தருளுகின்றான். திருவதிகையில் உட்புக அஞ்சிச் சித்தவடமடத்தில் தங்கியபோது திருவடி தீட்சை செய்வித்தருளுகின்றான்.

வழிவழி மரபு :

வாழையடி வாழையென வரும் இவ்வரிய பண்பினை சைவ சமய வரலாற்றில் கண்டு மகிழ முடிகிறது. தமக்கு முன்னே வாழ்ந்திருந்து சிவபெருமானுக்குப் பதிகப் பாமாலை சூட்டிய காரைக்கால் அம்மையார் பேறுபெற்ற வடதிருவாலங்காட்டினை மிதிக்க அஞ்சிய திருஞான சம்பந்தர் பெருமிதமும், அவர்போற்றிய காரைக்கால் அம்மையார் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கயிலையைக் காலால் மிதிக்க அஞ்சித் தலையால் நடந்து சென்ற பண்பாடும், சான்றோர்களிடத்தும், நமக்கு நல்வழிகாட்டியருளிய பெரியோர்களிடத்தும் நாம் காட்ட வேண்டிய அடக்கத்தையும், மரியாதையையும் விளக்குகின்றன. இவற்றையெல்லாம் அறிவித்தருளிய வழிகாட்டியாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் குலதெய்வமாக நினைந்து போற்றுவது மிகவும் பொருத்தமானதல்லவா ?

**வினையும் விளக்கமும்:**

இது கொள்ளத்தக்கது; இது தள்ளத்தக்கது; இப்படித்தான் வாழவேண்டும்; தவறினால் இன்னது தண்டனை என்றெல்லாம் நம் பொருட்டு வாழ்ந்து காட்டிய வாழ்க்கை சுந்தரமூர்த்தி சுவாமிகளின் அருள் வாழ்க்கை. தம்மையே தோழனாகத்தருகிறான் இறைவன். எல்லாப்பேறுகளும் முற்ற நல்குகின்றான். என்றாலும் பிழைகண்ட போது உரிய தண்டனை தருகின்றான். சங்கிலியார்க்குத் தந்த வாக்கினை மீறியவுடன் திருவொற்றியூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கண்ணொளியினை மறைக்கிறான். பெருந்துயரத்தோடு சுந்தரர் வாடுகிறார். உயிர்கள் இயற்றிய வினைக்கீடான அனுபவத்தைக் குறைவறக் கூட்டுபவன் இறைவன். நல்வினையாயினும், தீவினையாயினும் அனுபவித்தே தீர்க்கவேண்டும் என்பது சைவசித்தாந்த உண்மை. தருமையாதீனக் குருமுதல்வரும் இதனை,

"அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமையுணர் வதுவே"

என இதனை நன்கு விளக்கியருளுகின்றார்கள். வினைகளை யாராக இருந்தாலும் அனுபவித்தே தீரவேண்டும். வினைவலிமை குறையும்போது இறைவன் வந்து ஆட்கொள்வான் என்பதே நியதி. இவ்வாறு வினைத் துயர் உற்றபோதும், இவையெல்லாம் தம் அறியாமையால் வந்தன என்று தம்மையே நொந்துகொண்டு, தலைவனைப் பழிகூறாத பெருந் தன்மையைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில் காண்கின்றோம்.

**வழிபட்டு உய்வோம்:**

எனவே, சைவம் ஆய்ந்து காணமுடியாத தொன்மையது என்பதையும், வேதவழிப்பட்ட நமது வைதீக சமயத்தில் நிலவிய குழப்பம் நீக்கித் தெளிவான வரையறை காட்டிய முதலாசாரியர் திருஞானசம்பந்தர் என்பதையும், அவர் குறித்த சைவநெறிமுறைகளை விளக்கியருளிய ஆசாரியர் திருநாவுக்கரசர் என்பதையும், இவ்விரு ஆசாரியப் பெருமக்களையும் மற்ற நாயன்மார்களாகிய அடியவர் பெருமக்களையும் நமக்கு அறிவித்த சைவ சமய வழிகாட்டியாக விளங்குபவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்பதையும் இவற்றால் அறிகிறோம். ஆசாரியர்களை அறிவித்ததோடு அமையாது, ஆசாரியர்களை எவ்வாறு போற்ற வேண்டுமென்று வாழ்வாலும் வாக்காலும் அறிவுறுத்தியருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடிகளை, அவர்கள் இறையடியிற்கலந்த ஆடிச் சுவாதித் திருநாளில் நெஞ்சில் நினைந்து போற்றி வழிபட்டு உய்வோமாக.

வாழ்க குலதெய்வம். வளர்க சிவநெறி.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த

பரமாசாரிய சுவாமிகள்

திருவாரூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாவில்

வழங்கியருளிய

# ஆசியுரை

22—4—79

"பிறப்போ டிறப்பென்றும் இல்லா தான்காண்
பெண்ணுருவோ டாணுருவ மாயினான்காண்
மறப்படுமென் சிந்தைமருள் நீக்கி னான்காண்
வானவரும் அறியாத நெறிதந் தான்காண்
நறப்படுபூ மலர்தூபம் தீபம் நல்ல
நறுஞ்சாந்தம் கொண்டேத்தி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்கும் திருவா ரூரில்
திருமூலட் டானத்தெம் செல்வன் தானே"

— அப்பர் சுவாமிகள்

**ஆதியும் அந்தமும் இல்லாதவன் :**

இன்று அப்பர் சுவாமிகள் குருபூஜைத் திருநாள். இந்நாளில் இங்குக் கூடியுள்ளோர்க்கு அப்பர் அருளிய பாடல் ஒன்றினை நினைவு படுத்தினால் அது பயன் தரும் என்றுகருதுகின்றோம். அப்பர் சுவாமிகள் பல இடங்கள்தோறும் தலயாத்திரை செய்துவருகின்றபொழுது திருவாரூருக்கும் சென்று சேர்ந்தார். அப்பொழுது, அங்குக் கோயில் கொண்டுள்ள பெருமானை வணங்கித் துதித்துப் பாடிய பாடல் ஒன்றைத்தான் முதற்கண் நினைவுப்படுத்தினோம். அந்தப் பாடலையே இன்றைய சிந்தனைக்கும் எடுத்துக்கொள்வோம்

இறைவன் பிறப்பு இறப்பு இல்லாதவன். இவ்வுலகில் எப்பொருளுக்கும் தோற்றம் உண்டேல் மரணம் உண்டு; ஆதி இருந்தால் அந்தம் உண்டு. முதல் இருக்குமேல் முடிவும் உண்டு. இவை எதுவும்

இல்லாதவன் இறைவன். அவனுக்கு ஆதியும் இல்லை; அந்தமும் இல்லை. அதனால்தான் மணிவாசகர் "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி" என்று பாடுகின்றார். அவன் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம்பொருளாக இருப்பவன். ஆதி அந்தம் இல்லாத இறைவனை – அநாதி என்றும் கூறுவர். இன்னும் கூறப் போனால் எந்தநிலையிலும் மாற்றம் இல்லாதவன். என்றும் ஒருபடித் தாய் இருப்பவன். அதனால்தான் அவனை இயற்கை என்று கூறினர் முன்னோர்.

**எது இயற்கை ?**

இன்று எதை எடுத்தாலும் இயற்கை என்று சொல்லுவதைக் கேட்கின்றோம். நம் ஊரில் ஒருசோலை இருந்தால் 'ஆகா ! இயற்கை என்ன அழகாக இருக்கிறது' என்கின்றோம். செவ்வானத்தைப் பார்த்தால் இயற்கை என்கிறோம். அது தவறு இன்று நாளை என்றில்லாமல் என்றுமே மாறுததாக ஒருநிலையிலேயே இருப்பது எதுவோ அதுவே இயற்கை என அழைக்கப்பெறும். ஆகவே இறைவனே அந்நிலையில் உள்ளவன். பிறவெல்லாம் காலவெள்ளத்தில் கரைந்துபோகக்கூடியன. ஆதலின் இறைவனையே இயற்கை என அழைத்தல் தகும். அவன் எந்தச் செயல் செய்தாலும் விகாரப்படு பவன் அல்லன். அவன் அவிகாரி. ஏனெனில் நினைவுமாத்திரையே காரியங்கள் ஆற்றும் தன்மையுடையவன். இத்தகைய தன்மைகள் உடைய இறைவனையே அப்பரடிகள் முதற்கண் 'பிறப்போடு இறப்பு என்றும் இல்லாதான் காண்' என்று கூறுகின்றார்.

**பிறந்த கதைகூட இல்லை :**

நாம் கருவிகரணங்களோடு கூடிநிற்பதே பிறவியாகும். இப்பிறவி இல்லையெனில் நாம் செயல்படமுடியாது. ஆனால் இறைவனுக்குக் கருவியோ கரணங்களோ தேவையில்லை. உதாரணமாகச் சொல்லப் போனால் நாம் ஒரு பொருளைக்காணக் கண்வேண்டும்; ஒலியைக் கேட்கக் காதுவேண்டும் ஓரூருக்குச்செல்லுவதற்குக் காலின்துணை வேண்டும். இறைவனுக்கு அங்ஙனம் கருவிகரணங்கள் தேவை யில்லை. அதனால் எவ்வகையிலும் இறைவனுக்குப் பிறப்புத் தேவை யில்லை. குகைநமசிவாயதேவர் என்பார் 'அருணகிரி அந்தாதி' எனும் நூலில் இக்கருத்தினைவைத்து அழகுறப் பாடுகின்றார்.

"எல்லார் பிறப்பும் இறப்பும்இயற் பாவலர்தம்
சொல்லால் தெளிந்தேம்நம் சோணேசர் - இல்லில்
பிறந்தக்கதை யும்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்(டு)
இறந்தகதை யும்கேட்டி லேம்."

இப்பாடலில் அவர் கூறும்பொழுது 'பிறந்ததைக் கேளேம்' என்று கூருது 'பிறந்த கதையும் கேளேம்' என்று கூறியது பொருள் ஆழம் உடையது. எங்கும் கதையாகக்கூட இறைவன் இன்ன இடத்தில் இங்ஙனம் பிறந்தான் என்று கேட்கவில்லையே என்கின்ருர். இதனுல்தான் அம்பிகைக்கும் முருகனுக்கும் பிள்ளைத்தமிழ் பாடிய புலவர்கள்கூட, சிவபெருமானுக்குமட்டும் பிள்ளைத்தமிழ் பாடாதிருக்கின்ருர்கள் என்று இலக்கிய உலகிலும் இக்கருத்து நிலைநாட்டப்படுவதை நாம் தெளிந்துகொள்ளலாம்.

**பெண்ணுருவும் ஆணுருவும் ஆயினுன் :**

அடுத்துப் 'பெண்ணுருவோடு ஆணுருவும் ஆயினுன்காண்' என்கின்ருர். இவ்வுலகம் முழுவதுமே ஆண் பெண் என்னும் இருபகுப்பில் அடங்கிவிடக்கூடியது. சைவ சித்தாந்தமும் இவ்வுலகில் என்றும் நின்று நிலவும் பொருள்கள் மூன்று என்று கூறுகின்றது. 1. கடவுள், 2. அதற்கு நேர் எதிரிடையான உலகம், 3. இடைப்பட்டு நிற்கும் உயிர்கள். இவை மூன்றும் ஒன்ருல் ஒன்று தோற்றுவிக்கப் படாதது. என்றுமே நின்று நில்வும் தன்மையுடைய உண்மைப் பொருள்கள். இந்த வகையில் மூன்றும் ஒன்ருனலும் தகுதியில் வேறு வேறு நிலை உடையதே. இந்த மூன்று பொருள்களும் மேலே கூறியதுபோன்று தனித்தனியே இரண்டிரண்டு பகுப்புக்கள் கொண்டன. உயிர்கள் ஆண் பெண் என்றும் உலகம் அதாவது ஜடப்பொருள்கள் (அறிவில்லாப் பொருள்கள்) நேர்முனை (Positve) எதிர்முனை (Negative) என்றும், கடவுள் அம்மை அப்பன் என்றும் பகுப்புக்கள் உடையனவாய் இருப்பதை நாம் உணரலாம்.

கடவுள் ஆண் பெண் வடிவில் இருப்பது, இவ்வுலகில் உயிர்கள் அனைத்தும் அங்ஙனம் இருந்து வளர்ச்சியடையவேயாம். உயிர்களுள் தாவரங்கள் முதல் தேவர்கள்வரை இருகூறுகள் உடையனவாய் இருக்கின்றன. தாவரத்திலும் இடப்பக்கம் பெண்மையும் வலப்பக்கம் ஆண்மையும் இருப்பதை உய்த்து உணர்ந்துகொள்ளலாம். ஒவ்வொரு ஆணிடமும் ஆண்மை மிகுந்து பெண்மை குறைந்தும், ஒவ்வொரு பெண்ணிடமும் பெண்மை மிகுந்து ஆண்மை குறைந்தும் இருப்பதனைக் கூர்ந்துபார்த்தால் புரிந்துகொள்ளக்கூடும் ஆணிடம் பெண்மையே இல்லை என்ருே பெண்ணிடம் ஆண்மையே இல்லை என்ருே எண்ணுவது தவறு. இறைவனும் இந்த ஆணும் பெண்ணும் கலந்த நிலையில் இருப்பதைத்தான் அர்த்தநாரீசுவரர் எனும் உருவில் உணர்த்துகின்ருன். ஜடப்பொருள்களிலும் இருகூறுகள் உள்ளன. பொதுவாகப்பொருள் ஒன்ருய், தன்மை இரண்டாய் இருப்பதேநியதி; பயனுமாகும். பொருளும் ஒன்ருய், தன்மையும் ஒன்ருய் இருந்தால்

பயன் தராது. ஒருதாளம் ஓசை தராது; மின்கம்பிகூட இரண்டு வகையாக இருந்து பொருந்துகிறபொழுதுதான் மின்சாரம் கிடைக்கிறது. ஆதலின் இறைவனும் முதல்வன் எங்ஙனம் இரண்டாகி இருந்து அருளுகின்ருனே அங்ஙனமே சார்ந்தவையும் இருப்பதை உணர வேண்டும்.

**மருள் நீக்கிய மாண்பு :**

அடுத்து 'மறப்படும் என் சிந்தைமருள் நீக்கினுன்காண்' என்கின்ருர். மறம் என்ருல் பாவம் என்று பொருள். பாவத்தில் பட இருந்த என்னைக்காத்து என் சிந்தையின் மயக்கத்தை நீக்கியருளியவன் இறைவன் என்கின்ருர். 'மருள் நீக்கினுன் காண்' எனும் தொடர் அறிந்து இன்புறக் கூடியது தம் தாய் தந்தையர் தமக்கு இட்ட மருள்நீக்கியார் எனும் பெயரினை நினைவுபடுத்திக்கொள்வார் போல இந்த இடத்தில் வைத்துப் பாடியுள்ளார் என்று நாம் எண்ணி மகிழ இடந்தருகின்றது.

'வானவரும் அறியாத நெறிதந்தான் காண்' என்பது அடுத்து வருவது. இதில் தேவர்களும் உண்மையான விடுதலையாம் இறைவனடி அடைவது எனும் புண்ணியநிலையை அறியாதவர்கள் என்று அவர்களை நமக்கு இனங்காட்டுகின்ருர். அந்தத் தேவர்களும் இறைவன் அடியைத் தொழுது வீடுபேறு அடையவேண்டும் என்று நினைத்தால் இப்பூவுலகில் வந்து வழிபட்டால்தான் இயலும் என்பதனையும் குறிப்பாக நமக்கு உணர்த்துகின்ருர். வானவரும் அறியாத நெறிதருவான் என்று எதிர்காலத்தால் குறிப்பிடாது 'தந்தான்' என்று இறந்த காலத்தால் குறிப்பிட்டுள்ளார். சுவாமிகள் தாம் பெற்ற இறையருள் அனுபவத்தால் வானவர்கள் அறியாத நெறியாகிய வீடுபேறும் அடைவேன் என்ற உறுதிப்பாட்டில் இங்ஙனம் அருளியுள்ளார். "வாராக்காலத்தும் நிகழுப்காலத்தும் ஓராங்கு வருஉம் வினைச்சொற்கிளவி, இறந்தகாலத்துக்குறிப்பொடுகிளத்தல் விரைந்த பொருள என்மனுர் புலவர்" எனவரும் தொல்காப்பிய நூற்பாவை இங்கு நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

**ஏத்துவதும் பாடுவதும் :**

அடுத்து அவன் திருவடியை அடையும் வழி முறைகளில் ஒன்ருன சிவபூஜை செய்வது எப்படி என்கின்ருர். 'நறப்படு பூமலர் தூபம் தீபம் நல்ல நறுஞ்சாந்தம் கொண்டேத்தி......" என்று கூறுகின்ருர். தேன்பொருந்திய போதுகளையும் (போது - மலரும் பக்குவத்தில் உள்ள அரும்பு) மலர்களையும் தூபம் தீபம் நல்ல நறுஞ்

சாந்தம் முதலியவற்றையும் கொண்டு ஏத்தித் துதித்து வழிபடவேண்டும். வெறும் பொருள்களின் கூட்டம்மட்டும் போதாது. அவற்றுடன் நாம் இறைவனை எண்ணித் துதிக்கவேண்டும் என்று கூறுகின்றார். அப்பர் சுவாமிகளே "நிலைபெறுமாறு எண்ணுதியேல்" என்று தொடங்கும் மற்றொருபாடலில் "பூமாலை புனைந்து ஏத்திப் புகழ்ந்து பாடி" என்று கூறுவதும் இங்கேநினைவுகூரத்தக்கது ஆகும். புனைந்து ஏத்துவது, புகழ்ந்து பாடுவது எனும் இரண்டு நிலைகளை நமக்கு விளக்குகின்றார் அடிகள். உடல்வழியும் உணர்வுவழியும் நாம் வழிபடவேண்டும் என்பதைத்தான் இவ்விரண்டு நிலைகளும் நமக்குக் காட்டுகின்றது.

**அந்திக் காப்பு :**

இந்தநிலையில் "நாளும் வானோர் சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்" என்று கூறுகின்றார். திருவாரூர் திருக்கோயிலில் தேவாசிரய மண்டபம் ஒன்று இருப்பதைச் சுந்தரர் வரலாற்றாலும் நாம் உணர்கின்றோம். அம்மண்டபம் தேவர்கள் வந்து தங்கும் மண்டபம் என்னும் பொருளில் தேவ - ஆசிரய - மண்டபம் என்று அழைக்கப்பெறுகிறது. இன்றும் திருவாரூர் திருக்கோயிலில் மாலை வழிபாட்டில் தேவர்களும் வந்து வழிபடுவதாக ஐதிகம் இருக்கிறது' அதனால்தான் திருவாரூர் திருக்கோயிலில் மாலை வழிபாடு சிறந்தது என்று கருதப்படுகிறது. மாலை வழிபாட்டை அந்திக்காப்பு என்று வழங்குகின்றனர். மேலும் அப்பர் சுவாமிகள் இப்பாடலில் "சிறப்போடு பூசிக்கும் திருவாரூர்" என்று குறிப்பிடுவது திருவாதிரை போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடும் மற்றநாட்களில் நித்திய பூசையும் நடைபெற்றது என்ற குறிப்பினை நமக்கு உணர்த்தவே எனலாம் திருவள்ளுவர் 'சிறப்பொடு பூசனை செல்லாது.... " என்று கூறுவதும் இங்கே நினைவுகூரத்தக்கது ஆகும்.

இங்ஙனம் இப்பாடல் முழுவதும் அப்பரடிகளின் அரும்பெரும் அருள் அனுபவமும் அரிய சொல்லாட்சியும் மிளிர்வதை நாம் நன்கு நுணுகி ஆய்ந்து உணரலாம். அவ்வருளாளரின் பாடல்கள் ஒவ்வொன்றையும் இங்ஙனமே ஆய்ந்து கற்கவும் அதன்வழி நிற்கவும் முயலவேண்டும்.

இவ்விழாவில் பங்குகொள்வோரும், இவ்விழாவினைப் பக்தியுடனும் பொறுப்புடனும் நடத்திவரும் சிதம்பரம் அன்பர்கள் வாகீசம் பிள்ளை திருநாவுக்கரசு பிள்ளை அவர்கள்தம் குடும்பத்தினரும், மற்றும் பக்தர்களும் எல்லா நன்மையும் பெற்றுவாழச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

# அருள் நந்திசிவத்தின் —
# — அருளியல் உள்ளம்

சித்தாந்தப்புலவர்மணி.

திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

தமிழ்நாட்டில் வாழையடி வாழையாகத் தொன்றுதொட்டுத் தோன்றி வந்துள்ள சான்றோர்கள் பலராவர். அவர்களுள், அருள் நந்தி சிவாசாரிய சுவாமிகள் ஒருவர். நம்மிற் பெரும்பாலோர், தொல்காப்பியர் திருவள்ளுவர் இளங்கோவடிகள் நக்கீரர் கம்பர் போன்ற சான்றோர்களைமட்டுமே பொதுவாக அறிவர். அருள்நந்தி சிவம் போன்ற சான்றோர்கள் பலரைத் தமிழ்மக்கள் பெரும்பாலோர் அறிந்து கொள்ளவில்லை. திருநீறு அணியும் சைவர்களில் ஒருசில ருக்கு மட்டுமே அருள்நந்திசிவம் உரியவர் அல்லர். தமிழ்மக்கள் அனைவருக்குமே சிறப்பாக உரிய தொல்காப்பியர் திருவள்ளுவர் போன்ற சான்றோர்களில், அருள்நந்திசிவமும் ஒருவராவர் எனத் துணிந்து கூறலாம்.

இலக்கணத்திற்குத் தொல்காப்பியரும், நீதிநூலுக்குத் திருவள்ளு வரும், நெஞ்சை அள்ளும் செஞ்சொற் காப்பியத்திற்கு இளங்கோவடி களும், கவிதைச் சுவைக்குக் கம்பரும், தமிழக வரலாற்றுக்குச் சேக்கிழாரும், பக்தி இயக்கத்திற்கு ஆழ்வார்களும் நாயன்மார்களும், யோக ஞான அனுபவங்களுக்குத் திருமூலரும் போல, நமது தமிழ் நாட்டில் தத்துவ ஞானத்திற்குத் தலைசிறந்த பெருஞ்சான்றோர்களாக மதித்துப் போற்றத் தக்கவர்களுள், ஆசிரியர் அருள்நந்தி சிவம் மிக்க பெரும் சிறப்புடையவர் ஆவர். உலகப்பெரும் தத்துவஞானச் சான்றோர்களின் குழுவில், ஒரு பெரும் சிறப்புறுப்பினராக ஒருங்கு வைத்துப் போற்றிவணங்கத்தக்கவர் அருள்நந்தி சிவம் எனலாம்!

**சிவஞான சித்தியார் :**

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள், சிவஞான சித்தியார் என்பது ஒன்று. ஆசிரியர் மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் என்னும் முதல்நூலுக்கு ஒரு சிறந்த விரிவுரை போலவும். அதன் வழிநூலாகவும் அமைந்த சிறப்புடையது, சிவ ஞானசித்தியார். இந்நூலின் ஆசிரியரே அருள்நந்திசிவாசாரியர்

ஆவர். அவரைப்பற்றி விரிவான விவரமான வரலாறு ஏதும் நமக்குக் கிடைக்கப்பெறவில்லை. ஆயினும், அவர்தம் பெருமாட்சிமை இனைத்தென்பது, சிவஞானசித்தியார் என்னும் செந்தமிழ்த் தத்துவ ஞான நூலாற்றெள்ளிதிற் புலனுகின்றது. சிவஞானசித்தியார் பரபக்கம் சுபக்கம் என்னும் இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது பரபக்கத்தில் உலகாயுதம் முதல் பாஞ்சராத்திரம் ஈருக உள்ள பல்வேறு சமயங்களையும், அவ்வச்சமய நோக்கின்வழிநின்று ஆராய்ந்தும், சுபக்கத்தில் சித்தாந்த சைவ நோக்கின்வழிநின்று, பிறசமயங்களின் ஐயங்களைப் போக்கியும், தமிழகத்தின் தத்துவ ஞானவித்தகக் கருத்துக்களை நம் அருள்நந்தி சிவாசாரியர், முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிஞர் எனத்தகும் நிலையில், செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொற் கவிதைகளால், அழகொழுக விளக்கியருளியிருக்கின்ருர். தமிழ்மொழிக்கண் உள்ள மிகமேலான சிறந்த உயர்தர நூல்களின் வரிசையில், முன்னணியில் ஒன்ருக விளங்கித்திகழ்வது சிவஞானசித்தியார் என்பதில் ஐயமில்லை. அந்நூலின் சிறப்பிற்கும், ஆசிரியரின் அருளியலுள்ளத்திற்கும் சான்ருக, ஈண்டைக்கு ஒன்றை மட்டும் இயன்ற அளவு கண்டு அமைவோம்.

**உலகாயதன் :**

சிவஞான சித்தியாரின் தொடக்கத்தில், பரபக்கப் பகுதியில், உலகாயதன் தன்னுடைய மதக் கொள்கைகளைப் பின்வருமாறு கூறுகிருன் :- "அளவையாவது காட்சி ஒன்றே; அனுமானம் முதலியன வேண்டுவதில்லை; நிலம், நீர், தீ, காற்று எனப் பூதங்கள் நான்கே. வன்மை தண்மை வெம்மை அசைவு என்பன இப்பூதங்களின் இயல்புகள். மணம் சுவை உருவம் ஊறு என்பன இவற்றிற்குரிய குணங்கள். மண்ணிலிருந்து குடம் அமைவது போல, இவற்றிலிருந்து உருவங்கள் பல தோன்றும். புத்தி குணம் பொறி புலன்கள் முதலியன, நீரில் எழும் குமிழி போல இவற்றிலிருந்து தோன்றி அழியும். இவற்றின் வேருக, வினை உயிர் கடவுள் என்பன எதுவும் இல்லை.

இவ்வுலகில் மேலான இன்பம், பெண்ணின்பமேயாகும். இம்மையில் இவ்வின்பத்தை நுகரமாட்டாமல், மறுமையில் இன்பம்பெறலாம் என்று முயல்வது மூடர்களின் செயலேயாகும். அவ்வறிவிலிகளின் செயல், தாகமுற்றவர்கள் தண்ணீர் கிடைக்குமிடத்தில் அதனைப்பருக மறுத்துவிட்டு, அது கிடைக்காத இடத்தில் அதற்காக ஏங்கி வருந்துகின்ற செயலையே ஒக்கும். உண்மையான தவம் என்பது, மகளிரோடு ஊடுவதும் உணர்வதும், காதலியரை நினைந்து வாடுவதும், அவர்களின் அடியில் விழுந்து அவர்தம் அன்பைப் பெற வருந்துவதுமே

யாகும். தம்மை மறந்து வேட்கை மீதூர்ந்து, மகளிர்பால் எய்துகின்ற இன்பமே முத்தியாகும். இத்தகைய இன்பத்தில் ஆழ்ந்து திளைப்பவர்களே, முத்தி பெற்றவர்கள் ஆவர் ...'' என உலகாயதன் கூறுகின்றான். இக்கருத்துக்களை ஓர் உலகாயதன் எத்தகைய நிலையில், அழுத்தம் திருத்தமாக வற்புறுத்தி, உணர்ச்சி பெருகக் கூறுவானோ, அதேநிலையில் அக்கருத்துக்களை அழகிய இனிய கவிதைகளாக, அருள்நந்திசிவம் மிகச் சிறப்பாகத் தொகுத்துக் கூறியிருக்கின்றார்.

**உலகாயதன் மதமறுதலை :**

இங்ஙனம் உலகாயதனின் மதக்கொள்கைகளைத் தொகுத்துக் கூறியிருக்கின்ற அவரே, அவன்பால் அருள்உள்ளம் கொண்டு அவனைத் திருத்தி அறிவுறுத்தி ஆட்கொள்ளும் முறையில், ''உலகாயதன் மதமறுதலை'' என்னும் பகுதியில், அவனது கொள்கைகளை மறுத்துப் பின்வருமாறு சில அறிவுரைகள் கூறுகின்றார்.

(1) ''உலகாயதனே : பெண்ணின்பமே பேரின்பமென்று நீ பெரிதும் வியந்து புகழ்ந்து கூறுவாய். அருவருப்பிற்குரிய தோல் இரத்தம் இறைச்சி மேதை எலும்பு மச்சை சுக்கிலம் என்னும் எழுவகைப் பொருள்களால் அமைந்ததே, ஒரு பெண்ணின் உடல். அஃது ஒரு சிறு குடிசை போன்றது. புலால் நாற்றம் வீசுவது; அழுக்கு நிறைந்தது, புழுக்கள் நெளிவது; நூல் போலக் கோழை நீர் ஒழுகுவது; வெறும் போலிப் புறத்தோற்றம் மட்டுமே கண்டு மயங்கற்க. திண்ணமாக இது மலத்திரள் என்பதனை உணர்ந்து தெளிக''.

(2) ''பன்றியானது, அருவருக்கத்தகுந்த அழுக்கும் புழுக்களும் நிறைந்த மலத்தை அளைந்து தின்று, இன்பமென்று நுகர்ந்து மகிழும். அதுபோலவே பெரிதும் இழிந்த ஒன்றைப் பேரின்பம் என்று நீ மயங்கி நிற்கின்றாய். குற்றமற்று விளங்குவதும், என்றும் அழிவில்லாததும், மிகத்தூய்மையானதும், மேன்மேலும் பெருகி வளர்ந்தோங்குவதும் ஆகிய சிறந்த பேரின்பம் ஒன்றுள்ளது. அஃது இறைவனுக்கு அடிமை செய்து, அவனருளால் நாம் பெறுகின்ற இன்பமேயாகும்''.

(3) ''பிறர்மீது பகையுணர்ச்சியாகிய குரோதமே, தமது குணமாகக் கொண்டிருப்பவர்கள், மன அமைதியாகிய சாந்தியின் நன்மையை அறியமாட்டார்கள். எதன்மாட்டும் ஆராத பேராசையை உடையவர்கள், ஆசைகளை ஒழிப்பதனால் உண்டாகும் இன்பத்தை உணரமாட்டார்கள். யாவராலும் துதிக்கப்படுகின்ற தேவர்களும் போற்றி வணங்குகின்ற, மாபெரும் தலைவனாகிய இறைவனுடைய

திருவடிகளை நீ பற்றிக் கொள்; அதனால் உண்மையிலேயே மிகமேலான சிறந்த இன்பம், நினக்கு மேன்மேல் பெருக உண்டாகும். இது சத்தியம்''.

(4) ''காமம் முதலிய இழிந்த குணங்களை, நீ உனக்குச் சுகந் தரும் என்று மயங்கி எண்ணிக்கொண்டிருக்கின்றாய். குளிர் மிகுந் துள்ளபொழுது வெப்பம் மிக்க நெருப்பு சுகம் தரும். கடுமையான வெப்பம் மிகுந்துள்ளபொழுது, நல்ல குளிர்ச்சி இன்பம் தருவதாக இருக்கும். வெம்மையும் தண்மையும் தாமே இன்பம் தருவன அல்ல; அவைகள் இன்பம் தருவதாகத் தோன்றுவது சார்பினாலேயே யாகும். தெய்வத் திருவருளாகிய நன்னெறியைச் சேர்ந்து ஒழுகுவதனால் தான், நமக்கு உண்மையிலேயே நலம் தருகின்ற அழியாதபேரின்பம் ஏற்படும்.''

(5) ''உலகாயதனே: நீ நல்ல இறையருள் நூல்களைப் படி; பயனற்ற இழிந்த போலி நூல்களைப் படியாதே; வீண் பேச்சுக்களைப் பேசாமல், இறை உயிர் உலகு என்னும் பதி பசு பாசங்களைப் பற்றிய, நல்ல பயனுடைய சொற்களைப் பேசுக. அழிந்து போகின்ற இழிந்த மனிதர்களைப் போற்றிப் புகழ்ந்து வணங்கிக் காலம் கழிக்காமல், அழிவற்ற அருள் நிறைந்த இறைவனின் திருவடிகளையே புகழ்ந்து போற்றி உய்க. காமம் வெகுளி மயக்கம் முதலிய குற்றங்களைக் கடிந்து அகற்றுக இறைவனுடைய திருவருட் பேறுகிய செல்வத்தையே அடைய முயற்சி செய்க. ஆணவம் மாயை கன்மம் என்னும் மும் மலத் தொடர்பை நீக்கிக்கொண்டு, இறையருளால் நின்மலத்துவம் எய்துக. அதனால் நினக்குப் பிறப்பிறப்புத் துன்பங்களற்ற பேரின்ப மாகிய முத்தி எளிதிற் கிடைக்கும்.''

**முடிவுரை :**

இங்ஙனம் பல சிறந்த கருத்துக்களை உலகாயதன் மதமறுதலைப் பகுதியில் அருள்நந்தி சிவம் அறிவுறுத்துகின்றார். இப்பகுதியில்,

" குரோதமே குணமாய் இருந்தவர்
சாந்தி நன்மை குறிக்கொளார் " 1

" அராகமே அணைவார்கள் ஆசை
அறுத்த இன்பம் அறிந்திடார் " 2

" பராவு தேவர் பராவு தூய
பராபரன் அடி பற்றிநீ,
விராவு; மெய்யில் விடாத இன்பம்
விளைந்திடும்; இது மெய்ம்மையே;" 3

" படிக்கும் நூல்கள் சிவாகமம்;" 4

" பசு பாசமோடு பதித்திறம் எடுத்து இயம்புவது" 5

" ஈசன் வார்கழல் ஏத்திடும் தொழில்" 6

" என்றுமே விடுத்திடும் பொருள் காமம் ஆதிகள் " 7

" வேண்டிடும் பொருள் ஈண்டு அருள்" 8

" முடித்து மும் மலம் விட்டு, நின்மல
னேடு நின்றிடல் முத்தியே" 9

எனவரும் சிறந்த உபதேசங்கள் அமைந்த இரண்டு பாடல்களும், ஏதோபொதுவாக நூற்போக்கில் அமைந்த செய்யுள்களாக இல்லாமல், அருள்நந்திசிவம் தாமே நம்முன் நேரில்வந்து நின்று வழங்கியருளும் அறிவுரை, அருளுரைகள்போல விளங்குகின்றன

" சேமம் ஆகிய இன்பமாம், மிகு
தெய்வ நன்னெறி சேரவே" 1

" மாச தற்றெளிர் நித்த சுத்த
வளம்தரும் சுக வாரிகாண்;
ஈசனுக்கு அடிமைத் திறத்தின்
இசைந்து நாம்பெறும் இன்பமே " 2

எனவரும் வரிகள், எத்துணைச்சிறந்த பொருள் பொதிந்துள்ளன என்பது எண்ணி எண்ணி மகிழ்தற்கு உரியது. "படிக்கும் நூல்கள் சிவாகமம்; எடுத்தியம்புவது பசு பாசமோடு பதித்திறம்; ஏத்திடும்தொழில், ஈசன் வார்கழல்; என்றுமே விடுத்திடும் பொருள் காமம் ஆதிகள்; வேண்டிடும் பொருள் ஈண்டு அருள்; முடித்து மும்மலம் விட்டு நின்மலனேடு நின்றிடல் முத்தியே" என்று உலகாயதனுக்குக் கூறப்பெறும் அறிவுரையால், **அருள்நந்திசிவத்தின் அருளியலுள்ளம்** புலனுதல் காணலாம். "கலைத்துறையில், மனிதன் தன்னுடைய கலைப்படைப்புக்களை வெளியிடாமல், தன்னையே வெளியிட்டுக்கொள்கின்றன்" (In art man reveals himself and not his objects) என்னும் உண்மைக்கு ஏற்ப, அருள்நந்தி சிவம் இப்பாடலின்மூலம், தம்முடைய சிறந்த இயல்புகளையே, தம்மையும் அறியாமல் ஒரு வகையில் வெளியிட்டுக் கொள்கின்றார் எனலாம்.



# திருவாவடுதுறைத் தலச் சிறப்புக்கள்

**தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,**

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.**

சோழவள நாட்டில் காவிரியின் தென்கரைத் தலங்களில் 36 வது தலமாக விளங்கித்திகழ்வது திருவாவடுதுறை. தஞ்சை மாவட்டம் மாயூரம் வட்டத்தைச் சார்ந்த இத்தலம், திருக்கோயில் சிறப்பாலும் திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தைப் பெற்றுள்ள பெருமையாலும் சமய உலகில் குறிப்பிடத்தக்க வரலாற்றுப் பெருமையைப்பெற்றுள்ளது.

மாயூரம் கும்பகோணம் இருப்புப்பாதையில் நரசிங்கன்பேட்டை இரயில் நிலையத்திலிறங்கித் தென்கிழக்கே 1 கி. மீ. சென்றால் இத்தலத்தை அடையலாம். மாயூரத்திலிருந்தும், கும்பகோணத்திலிருந்தும் இத்தலத்திற்கு வரப் பேருந்துகள் நிரம்ப உள்ளன.

**கோயிலமைப்பு:** திருவாவடுதுறைக் கோவில் ஊர் நடுவே. கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மூன்று பிராகாரங்கள் எதிரே கோமுக்தி தீர்த்தம். கோவில் அண்மையில் திருப்பணிகள் செய்வித்து கும்பாபிஷேகம் நடத்திய புதுப்பொலிவோடு விளங்குகிறது.

இராஜகோபுர வாயிலில் திருக்கயிலையிலிருந்து பசுவுருவான அம்பிகைக்குத் துணைவந்த விநாயகரும், முருகனும் விளங்குகின்றனர். கோபுரவாயிலைக் கடந்தவுடன் இருபுறங்களிலும் ஆதிகோமுக்தீசுவரர் நால்வர், கோயில்கள் உள்ளன.

இரண்டாம்கோபுர வாயிலில் இத்தலத்தின் புகழ்பெற்ற பெரிய நந்திதேவர் விளங்குகின்றார். பின்னால் திருஞானசம்பந்தருக்குப் பொற்கிழி வழங்கிய பூதம் அமைந்த பலிபீடம். முன்னால் கொடிமரம். இரண்டாம்கோபுர வாயிலில் வரசித்தி விநாயகர் உள்ளார். திருஞானசம்பந்தர் தெய்வத் தமிழ்மணம் வீசக்கண்டு திருமந்திரச்சுவடிகளைக் கண்டெடுத்த அறையும், அலுவலகமும் உள்ளன. வடபால் நூற்றுக்கால் மண்டபமும் இத்தல விருக்ஷமாகிய படர் அரசும் உள்ளன.

இரண்டாங்கோபுர வாயிலைக் கடந்தவுடன் இரண்டாம் பிராகாரத்தில் அம்பாள்சந்நிதி தெற்கு நோக்கி உள்ளது. இப்பிராகாரத்தில் தான் திருமூலர் கோயில் மேற்குப்பிராகாரத்தில்உள்ளது. மூன்றாம்

கோபுரவாயிலைக் கடந்து உள்ளேசென்ருல் கிழக்கே சூரிய சந்திரர், சுந்தரர் தெற்கே அறுபத்துமூவர் உள்ளனர். மேற்கே கன்னி விநாயகர் முருகன் லட்சுமி மற்றும் பலராலும் பலகாலத்திலும் பிர திட்டை செய்யப்பெற்ற சிவலிங்கங்கள் உள்ளன. வடக்குப்பிராகாரத் தில் பசுவுருநீங்கிய நிலையில் அம்பிகையை அணைத்தெழுந்த பெரு மான் திகழ்கிருர். கலையழகும் தெய்வீகமும் பொருந்திய இவரை வழிபட்டு நடராஜர் சந்நிதியை அடையலாம். அடுத்து அம்பிகை பசு வுருவாய் வழிபட்ட ஐதிகச் சிற்பம், பைரவர், சூரிய சந்திரர் உள்ளனர் நவக்கிரகங்கள் இத்தலத்தில் இல்லை. கோளிலித்தலம் இதுவாகும்.

சுவாமிகோயில் திருவாரூர்த் திருக்கோயிலைப்போல. கருப்பக் கிருகத்தை அடுத்த தென்புறத்தில் தியாகேசர் திருக்கோயிலோடு திகழ்கிறது. சுவாமி கோயில் கர்ப்பக்கிருகம்; அர்த்தமண்டபம். ஸ்நபனமண்டபம், மகாமண்டபம் ஆகியனவற்ருேடு வரலாற்றுச் சிற்பங்கள் கூடியனவாய் அமைந்துள்ளன. சுவாமி சந்நிதியில் இத் தலத் திருவுலா மூர்த்திகள் உள்ளனர். தியாகேசர் செம்பொன் தியாகர், புத்திரத்தியாகர், சொர்ணத்தியாகர் என்று போற்றப்பெறுகிருர். தியாகர்சந்நிதியில் சந்தான குரவர்கள் விளங்குகின்றனர்.

சுவாமிகோயில் கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் தென்புறம் விநாயகர், அகத்தியர், தக்ஷிணுமூர்த்தி ஆகியோரும் மேற்கே இரு புறமும் திருமால் பிரமர் விளங்கும் இலிங்கோற்பவரும், வடக்கே பிர்மா துர்க்கை ஆகியோரும் உள்ளனர்.

தலப்பெருமை : திருவாவடுதுறை ஆதீன அருளாட்சியில் விளங்கித்திகழும் இத்தலம் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுர் தந்தையார் செய்யும் பெருவேள்விக்காக இறைவனை வேண்டிப் பொன்னுலவாக்கிழி பெற்ற பெருமையை உடையது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருமேனியிற் பிணித்திருந்த நோய்விலகப் பிரார்த் தித்த தலம். அம்பிகை பசுஉருவாய் இறைவனை வழிபட்டு அருள் நலம் பெற்ற புராணப்பெருமையைப் பெற்றது. மத்தியார்ச்சுனம் என் னும் திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கப் பெருமானுக்குத் திருநந்தித் தலமாகத் திகழ்வது. தேவர்கள் படரரசுமரமாக விளங்கிடப் பெரு மான் அம்மரநிழலில் எழுந்தருளி அருள்வழங்கிய இடம் இத்தலம். திருமூலநாயனுர் 3000 ஆண்டுகள் இங்குள்ள படர்அரசின் கீழ்த் தங்கிச் சிவயோகத்திலிருந்து ஆண்டொன்றுக்கு ஒருபாடலாக 3000 பாடல்களை அருளியபெருமையை உடையது. போகருடைய மாணவ ராகிய திருமாளிகைத்தேவர் பல அற்புதங்களை நிகழ்த்தி, மக்களுக்கு இறைநெறிகளை உபதேசித்தருளிய சிறப்பினை உடையது. நவகோடி

சித்தர்கள், முனிவர்கள், சமயாசாரியர்கள், சேரமான் பெருமான் நாயனுர், விக்கிரமபாண்டியன் முதலியோர் பலர் வழிபட்டதலம். முசுகுந்தமன்னனுக்கு மகப்பேறு அளித்து இத்தலத்தைத் திருவாரூராகவும், தம்மைத் தியாகேசராகவும் காட்டியருளிய புராணப் பெருமை படைத்தது. இவ்வரலாற்ருல் இங்குள்ள தியாகேசர் புத்திரத் தியாகேசர் என வழங்கப்படுகிருர். முனிவர்களின் வேண்டுகோட்கு இணங்க இறைவன் இத்தலத்தில் மகாதாண்டவம் புரிந்தார். இவர் ஆசனம் - வீரசிங்க ஆசனம். நடனம் - சுந்தரநடனம். முனிவர்களுக்கு ஞானேபதேசமும் சித்தர்களுக்கு அட்டமா சித்தியையும் இறைவன் அளித்தருளிய தலம். சித்தர்கள் பலர் இங்கு எப்போதும் வசித்து வருகின்றனர் என்பது ஐதிகம்.

தருமதேவதை இறைவனை இத்தலத்தில் வழிபட்டு இறைவனுக்கு வாகனமாகும் வரத்தைப்பெற்றது. இத் தலக்கோயிலில் மிகப்பெரிய நந்தியுருவத்தைக் காணலாம். தமிழ்நாட்டிலுள்ள மிகப் பெரிய நந்திகளில் திருவாவடுதுறை நந்தியும் ஒன்ருகும்.

**தலப்பெயர் :** கிழக்கே திருத்துருத்தியும் தெற்கே திருக்கோழம்பமும், மேற்கே துரங்காடுதுறையும், வடக்கே திருக்கோடிகாவும் சூழ்ந்திருக்க நடுநாயகமாகத் திகழும் இத்தலம் கோமுத்திநகர், அரசவனம், முத்திக்ஷேத்திரம், கோகழி, சிவபுரம், பிரமபுரம், அகத்தியபுரம், தருமநகர், கஜாரண்யம், நந்திநகர், நவகோடிசித்தபுரம் முதலிய பல பெயர்களை உடையது. ஆ + அடுதுறை = பசுக்கள் நிறைந்திருக்கும் காவிரிக்கரையில் உள்ள ஊர் என்ற பொருளைத் தருவதோடு அம்மை பசு உருவாய் வழிபட்டு அருள் பெற்ற புராண வரலாற்றைக் குறிப்பதாகவும் அமைந்துள்ளது.

**மூர்த்திகள் :** இக்கோயிலின் வாயிலில் உள்ள விநாயகர் துணை வந்த விநாயகர் என வழங்கப்படுவார். சுவாமி பெயர் அருள்மிகு மாசிலாமணிஈசர்; அருள்மிகு கோமுத்தீசுவர் என்றும் அழைக்கப்படுவார். சுந்தரர் தேவாரத்தில் சுவாமி அம்பாள் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. அம்பாள் பெயர் அருள்மிகு ஒப்பிலா முலையம்மை, வடமொழியில் அதுல்யகுஜாம்பாள் எனப்படுவார். நந்தி - தருமநந்தி எனப்படுவார்; பெரிய திருவுருவம்; கருங்கற்களால் இயன்றது. திருமூலர் கோயில் மேற்கு வெளிப்பிராகாரத்தில் உள்ளது. அணைத்தெழுந்த நாயகர் புத்திரத்தியாகர் திருவுருவங்கள் தரிசிக்கத் தக்கன. தியாகேசர் செம்பொன் தியாகர் எனவும் வழங்கப்படுவார்.

**தலமரம் :** அரசு. அரசமரத்தைத் தலமரமாகக் கொண்ட தலங்களில் இத்தலம் ஒன்று.

**தீர்த்தம் :** கோமுக்தி தீர்த்தம், பத்மதீர்த்தம், கைவல்ய தீர்த்தம் ஆகியன.

**அம்மை பசு உருவாய் வழிபட்டது :** திருக்கயிலையில் சிவபெருமானும் உமையம்மையும் விளையாட்டாகச் சதுரங்கம் ஆடினர். உலக மக்கள் இறைவழிபாட்டின் சிறப்பினை அறிந்து அதனை மேற்கொண்டு உய்தி பெறவேண்டிய நிமித்தமாக இறைவன் சதுரங்க விளையாட்டில் அம்பிகை வெற்றி பெறுமாறு திருவுளம்பற்றினர். ஆட்டத்தில் அம்பிகை வெற்றிபெற்றார். பெற்ற வெற்றியை எண்ணிச் சிறிது களிப்புற்றார். அக்களிப்புச்செருக்கு நீங்க, இறைவன் அம்பிகையை நோக்கி 'பூவுலகில் பசுவாகப் பிறந்து நம்மைப் பூசித்துப் பசுவுரு நீங்கி நம்மை அடைவாயாக' என்று அருளாணை பிறப்பித்தார். அதன் படியே அம்மை பசுவுருக்கொண்டு இத்தலத்தில் இறைவனைப் பூசித்துப் பசுவுருவம் நீங்கப்பெற்றார். அம்பிகை கொண்ட ஆவின் வடிவத்தை நீக்கிய காரணத்தால் இத்தலம் (ஆ - பசு, அடு - நீக்கிய, துறை - இடம்) ஆவடுதுறை எனப்பெற்றது. இதனை வடமொழியில் கோமுத்திபுரம் என்பர். இதனைச்சூழவுள்ள பிறதலங்களும் இவ் வரலாற்றுத் தொடர்புடையனவாக விளங்குதல் குறிப்பிடத்தக்கது.

**ஞானசம்பந்தர் உலவாக்கிழி பெற்றது :** திருஞானசம்பந்தர் திருவாவடுதுறைக்கு எழுந்தருளித் தங்கியிருக்கும் நாட்களில் ஒரு நாள், அவர்தம் தந்தையார் சிவபாதஇருதயர் தாம் வேள்வி செய் தற்குப் பொருள் வேண்டுமென்று ஞானசம்பந்தரைக் கேட்டார். தந்தையாரின் வேண்டுகோளை நிறைவேற்ற எண்ணிய ஞான சம்பந்தர் ஈறிலாப்பெருஞ்செல்வம் தந்தருளுவன இறைவன் திருவடி மலர்கள் அன்றோ என்று கருதி எழுந்து திருவாவடுதுறை மாசிலா மணியீசர் திருமுன்பெய்தி 'இடரினும் தளரினும்' என்று தொடங்கி விலையுடையருந்தமிழ் எனப்பெறும் திருப்பதிகம் பாடியருளினர். ஞானசம்பந்தர் விருப்பத்தை நிறைவேற்றக் கருதிய இறைவன் திருவருளால் சிவபூதம் ஒன்று ஆயிரம் பொன்னடங்கிய பொற்கிழி ஒன்றைவைத்து 'இப்பொற்கிழி எடுக்கஎடுக்கக் குறையாத உலவாக் கிழி; இறைவர் அருளால் உமக்கு அளிக்கப் பெற்றதாகும்' என்று கூறி மறைந்தது. ஞானசம்பந்தர் அதனைப் பெற்றுத் தந்தையாரிடம் அளித்தார்; சீகாழியில் உள்ள வேதியர்கள் அனைவருக்கும் வேள்வி செய்ய உதவுமாறு கூறினர். சிவபாத இருதயரும் அதனைப்பெற்று வேள்விகள் பலவும்செய்தும் செய்வித்தும் மகிழ்ந்தார். இதனைத் திருநாவுக்கரசர்,

" மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்

காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கு அம்பொன்
ஆயிரம்கொடுப்பர் போலும் ஆவடு துறையனூரே ''

என்று அருளிச்செய்துள்ளார்.

**சுந்தரர் உடற்பிணிநீங்கப் பாடியது :** சுந்தரர் சங்கிலியாரிடம் செய்த சபதம் பிழைத்த காரணத்தால் தம் இருகண்களை இழந்தார். உடல்நோயுற்றார். அதற்காக வருந்தாது திருவாரூர்த் தியாகேசரை வழிபடும் ஆர்வத்தோடு நடந்தார். காஞ்சிபுரம் வந்து இறைவனை வேண்டி இடக்கண் பெற்றார். அங்கிருந்து சோழநாடடைந்து அடியார்கள் எதிர்கொண்டழைக்கத் திருவாவடுதுறையை அடைந்தார். திருவாவடுதுறைத் திருக்கோயிலை வலம்வந்து வணங்கிய சுந்தரர் மாசிலாமணியீசரை வணங்கி 'கண்ணிலேன் உடம்பில் அடும் நோயால் கருத்தழிந்து உனக்கே பொறையானேன்' என்று கூறிப் போற்றினர். அங்கிருந்து திருத்துருத்தியை அடைந்து நோய் நீங்கப்பெற்றார்.

**திருமூலர் வரலாறு :** " நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் '' என்ற சுந்தரரால் போற்றப்பெற்ற திருமூலர், பத்தாம் திருமுறையாகிய திருமந்திரம் என்ற நூலை அருளியவர். திருக்கயிலையில் நந்திதேவரின் திருவருள்பெற்ற மாணாக்கருள் ஒருவராய் விளங்கிய இவர், அகத்திய முனிவரைக்கண்டு அவரோடு உடனுறைதற்கு எண்ணிப் பொதியமலை நோக்கிப் புறப்பட்டார். திருக்கேதாரம், பசுபதிநாதம், காசி, திருக்காளத்தி, திருவாலங்காடு, சிதம்பரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார். மாசிலாமணியீசரை வழிபட்டுச் சில நாட்கள் தங்கி இத்தலத்தைப் பிரிந்துசெல்ல முற்பட்டார். இத்தலத்தை அடுத்துள்ள சாத்தனூரில் ஆனிரைகள்பலவும் தம்மை அன்போடு பேணிமேய்த்த ஆயனாகிய மூலன் இறந்தமையால் அவனது உடலைச் சூழ்ந்து கொண்டு கதறும் காட்சியைக்கண்டார். பசுக்களின் துயரைப்போக்குதற்கு எண்ணிய முனிவர், மூலன் உடம்பில் தம் உயிரைப் பரகாயப் பிரவேசம் என்னும் யோகசித்தியால் புகுவித்து எழுந்தார். மூலன் உயிர் பெற்றதைக் கண்ட பசுக்கள் களிப்புற்றன. மாலையில் அப்பசுக்களைச் சாத்தனூரில் கொண்டுபோய்ச் சேர்த்த திருமூலர், பொது மடம் ஒன்றிற் சென்று யோகநிலையில் வீற்றிருந்தார். மூலனின் மனைக் கிழத்தி தன்கணவர் காலந்தாழ்த்து வருதலையும் அவரிடம் விளைந்த மாற்றங்களையும் அறிந்து நல்லோர் பலரிடம் தெரிவித்தாள். அவர்கள் மூலரின் இயல்புகளை ஆராய்ந்தறிந்து, 'இனி உன்னோடு சுற்றத் தொடர்பு கொண்டு இவர் வாழார்' என்றார்கள். அவள் தன் இல்லம் சென்றாள்.

திருமூலர் மறுநாட் காலையில் எழுந்து சென்று தம் உடலை வைத்திருந்த இடத்தில் அதனைக்காணாது, இறைவன் திருவருளை எண்ணி, மூலன் உடம்பையே தம் உடம்பாகக்கொண்டு திருவாவடுதுறைத் திருக்கோயிலின் மேல்பால் படர் அரசின் கீழ்த்தங்கிச் சிவயோகத்தமர்ந்திருந்து ஆகமங்களின் பிழிவாக விளங்கும் திருமந்திரம்என்னும் அரிய நூலை ஆண்டொன்றுக்கு ஒரு பாடலாக அருளிச்செய்தார். முடிவில் சிவபெருமான் திருவருளால் திருக்கயிலையை அடைந்து இறைவன் திருவடி நிழலில் உறையும்பேறு பெற்றார்.

ஆண்டு தோறும் இக்கோயிற் பெருவிழா இரண்டாம் திருநாளில் திருமூலருக்கு இறைவன் அருள் புரிந்த ஐதிகவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**திருமாளிகைத்தேவர் :** திருவிசைப்பா ஆசிரியர்களுள் ஒருவராகிய இவர் சோழநாட்டில் திருவிடைமருதூரில் ஆதிசைவ குலத்தில் தோன்றியவர். சோழ அரசர்களுக்குக் குருக்களாக விளங்கிய இவர் தம் பொறுப்பினைப் பிறரிடம் கொடுத்துவிட்டுத் துறவுமேற்கொண்டு திருவாவடுதுறையை அடைந்து அரசின்கீழ் அமர்ந்து அருந்தவம் புரிந்தார். போகமுனிவர் இவரது ஞானாசிரியராவர் திருமாளிகைத்தேவர் வாழ்ந்த அருட்டுறை மடமே திருவாவடுதுறை ஆதீனத் திருமடமாகும். திருமாளிகைத்தேவர் ஆலயம் இங்குள்ளது, அதனருகில் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் ஆலயம் அமைந்துள்ளது. திருமாளிகைத்தேவர் செய்த அற்புதங்கள் பலவாகும். பிணத்தைச் சுடுகாட்டுக்கு எழுந்து நடந்து செல்லும்படிச் செய்தார். தம்மைக் கொல்லவந்த நரசிங்கன் என்ற மன்னன் படைகளை மதில் நந்திகளை உயிர் பெற்றெழச்செய்து வெருட்டினார். அதனால் இத்தலக்கோயில் மதில்களில் இன்றும் நந்தி இல்லை. தில்லையில் ஓடாத தேரை ஓட்டினார். இவ்வாறு அற்புதங்கள் பலவற்றை இயற்றி இத்தலத்தில் வாழ்ந்த இவர் திருக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்தில் உள்ளது. இவருக்குப் பூசை நடைபெற்ற பின்னரே திருமடத்தில் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி பூசை முதலியன நடைபெறுதல் வழக்கம்.

**மூவேந்தர்களின் திருப்பணி :** சேரமான் பெருமாள் நாயனார் திருவாவடுதுறைக்கு வந்து மாசிலாமணிப் பெருமானுக்கு வடக்குத் திக்கில் வாயுமூலையில் சிவலிங்கப்பிரதிட்டை செய்து வழிபட்டார். அவ்விலிங்கம் சேரலிங்கம் என வழங்கப்பெறுகிறது. கோச்செங்கட் சோழன், வரகுண பாண்டியன் முதலியோர் இத்தலத்தில் பல திருப்பணிகள் புரிந்துள்ளனர்.

**முசுகுந்தன் பிள்ளைப்பெருவரம் பெற்றது:** முற்பிறவியில் குரங்காக இருந்து சிவபெருமான்மீது வில்வ இலையைப் பறித்துப்போட்ட

சிவபுண்ணியத்தினால் சோழர்குடியில் பிறந்த முசுகுந்தன், வலாசுரனை வெல்வதற்கு இந்திரனுக்கு உதவிய காரணத்தினால் தியாகேசரை இந்திரனிடமிருந்து பரிசிலாகப் பெற்றுவந்து திருவாரூரில் எழுந்தருளச்செய்து அரசுபுரிந்தான். தமக்கு மகப்பேறு அருளுமாறு தியாகேசரை வேண்டினான். ஆரூர்த்தியாகர் திருவாவடுதுறைசென்று திருப்பணிகள் பல புரிந்து வழிபடுமாறு அருளினார். அவ்வாறே முசுகுந்தன் துறைசைக்கு வந்தான். துறைசைக்கோயில் திருவாரூர்ப் பூங்கோயிலாகக் காட்சியளித்தது. இறைவன் முசுகுந்தனுக்குத் தியாகேசர் திருக்கோலம் காட்டி வேண்டும்வரம் அருளினார். முசுகுந்தன் திருப்பணிகள் பலவும் செய்து திருவிழாக்கள் நடத்தி மகப்பேறு பெற்று இன்புற்றான்.

**தேவாரத் திருமுறைகளில் :** திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத்திருப்பதிகம் மூன்றாம் திருமுறையில் நான்காம் பதிகமாக அமைந்துள்ளது. திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள் ஐந்து உள்ளன. அவை நான்காம் திருமுறையில் 56, 57 பதிகங்களாகவும், ஐந்தாம் திருமுறைகளில் 29 ஆவது பதிகமாகவும் ஆறாம் திருமுறைகளில் 46, 47 ஆவது பதிகங்களாகவும் உள்ளன. அப்பர் அருளிய பிறபதிகங்களிலும் (4–51–8, 6–70–4, 6–71–11, 6–89–1) இத்தலம் குறிப்பிடப் பெற்றுள்ளது. சுந்தரர் அருளிய இரண்டு பதிகங்கள் ஏழாம் திருமுறையில் 66, 70 ஆவது திருப்பதிகங்களாக உள்ளன. மற்றும் பன்னிரண்டாம் பதிகம் பத்தாவது திருப்பாடலிலும் இத்தலம் குறிக்கப்படுகிறது. (முதல் எண் திருமுறையையும் இரண்டாவது எண் பதிகத்தையும், மூன்றாவது எண் பாடலையும் குறிக்கும்.)

சேந்தனார் அருளிய திருவிசைப்பா பதிகம் ஒன்றும். அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களும் உள்ளன. ஸ்ரீ சாமிநாத முனிவர் இயற்றிய தலபுராணம் உள்ளது. அதனைத் துணையாகக் கொண்டு எழுதப்பெற்ற தலபுராணம் உரைநடை நூல் ஆதீன வெளியீடாக அச்சிடப்பெற்றுள்ளது. கோவை, கலம்பகம், அந்தாதி முதலிய இலக்கியங்களும் இத்தலத்திற்கு உள்ளன.

**கல்வெட்டுக்கள் :** இத்திருக்கோயில் பிற்காலச் சோழமன்னர்களுள் முதலாம் பராந்தகன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், விசயராசேந்திரன், முதற்குலோத்துங்கன், விக்கிரமசோழன், இராசராசதேவன் முதலானோர் காலங்களில் தோன்றியனவும் விக்ரமபாண்டியன் காலத்துத் தோன்றியனவுமாகிய கல்வெட்டுக்கள் பல உள்ளன.

---

# தருமையில் தெய்வத் தமிழ் முழக்கம்

பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.

(சென்ற இதழின் தொடர்ச்சி)

ஆரும் திருநாள் - கம்பர் திருநாள் பட்டிமண்டபமாக மலர்ந்தது. நடுவர் பொறுப்பேற்ற திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தன் முன்னுரையில், "இன்றைய நாளில் பட்டிமண்டபம் வெட்டி மண்டபமாக மாறிக்கொண்டு வருகிறது; பட்டிமண்டபத்தில் பங்கேற்போர் பாங்கறிந்து ஏறவேண்டும்" என்று கூறியது எல்லோருக்கும் மகிழ்வாகவும் கவர்ச்சியாகவும் இருந்தது. என்றாலும் அன்றைய பட்டிமண்டபம் பங்கேற்போருக்கு ஒரு சவாலாகவே இருந்தது. அன்று பங்குபெற்றோர் அனைவரும் துளியும் நடுவரின் கோபத்திற்கு ஆளாகாமல் பேசினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அது தருமை மண்ணின் அருமை போலும்; வாலிவதம் அவதார நோக்கமா? அழியாப் பெரும் பழியா? என்பது தலைப்பு எந்தக் கட்சியில் வாதிட்டாலும் கவிஞனுக்கும் கதாபாத்திரத்திற்கும் பெருமை சேர்ப்பதுதான் நோக்கம் என்பதனைப் புரிந்துகொண்டு வாதிட்டனர் அன்றைய அறிஞர்கள். நடுவர் தமக்கே உரிய பாணியில் தம் புலமைநலம் தோன்ற வாலிவதம் அவதாரமே எனத்தீர்ப்புக் கூறினார்கள்.

ஏழாம் நாள் - திருக்கல்யாணத் திருநாள். அன்று மாலை 6-30 மணி அளவில் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் திருக்கல்யாண ஏற்பாடுகள் நடைபெற்றன. பெருமானுக்கும் பெருமாட்டிக்கும் திருக்கல்யாணம் என்றால் குதூகலத்திற்கு என்ன குறைவு? இரவு 7 மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருமுன்னிலையில் திருக்கல்யாண உற்சவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. அன்றைய நாளில் மாண்புமிகு நீதிபதி திரு. டி என். சிங்காரவேலு அவர்கள் தொடக்கவுரையாற்றினார்கள். "நாங்கள் எல்லாம் குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளை வணங்கி அருளாணைக்குக் காத்திருக்கின்றோம்; நம் சமயம் வளர என்ன பணி செய்தாலும் துணைநிற்போம்" என மிகுந்த உணர்ச்சிவயப்பட்டு அவர்கள் கூறியது எல்லோரையும் மெய்சிலிர்க்கவைத்தது. அடுத்துச் சிறப்புரையாற்றிய ஆனதாண்டவபுரம் திரு. பி. இராமதாசஐயர் அவர்கள் 'மீனாட்சியம்மை திருமணம்' என்பதுபற்றித் தெளிவாகவும் நயமாகவும் விளக்கினார்கள். அன்று இரவு 9 மணி அளவில் மாயூரம் ஸ்ரீ கணநாதர் பொம்மை நாடக சபாவினர் அளித்த "வள்ளியம்மை திருமணம்" என்ற பொம்மை நாடகம் நடைபெற்றது. குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை பொம்மைகள் ஆடும் ஆட்டத்தைப் பார்க்க ஆர்வம் கொள்வதில் வியப்பில்லை; பொம்மையா? அது......... நம்மை ஈர்க்கும் செம்மையான உரு அல்லவா அது! ஆண்டவன் அமைத்த மேடையில்

தினமும் ஆடிக்கொண்டிருக்கும் நமக்கு நம்மைப் புரிந்துகொள்ள உவமைதானே பொம்மை ஆடும் ஆட்டம்.

எட்டாம் திருநாள் — திருவள்ளுவர் திருநாள் சிந்தனை அரங்கமாக நிகழ்ந்தது. வள்ளுவம் நடைமுறையா ? குறிக்கோளா? எனும் தலைப்பில் பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. அவர்கள் தமக்கே உரிய எடுப்பான நடையில் பல்வேறு கோணங்களில் வள்ளுவம் நடைமுறையில் பின்பற்றத் தகுந்ததுதான் என்று விளக்கினார்கள். அடுத்து மதிப்பிற்குரிய திரு க. வச்சிரவேல் முதலியார் அவர்கள் "வள்ளுவரின் கடவுட் கோட்பாடு' என்னும் தலைப்பில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் வள்ளுவர் குறளில் எப்படியெப்படியெல்லாம் அமைந்துள்ளன என்பதை விளக்கினார்கள்.

ஒன்பதாம் திருநாள் — திருத்தேர். அன்றுகாலை 9 - மணிக்கு மேல் திரளான பக்தர்கள் கூடிநின்று பெருமானையும் பெருமாட்டியையும் திருத்தேரில் எழுந்தருள வைத்து வழிபாடாற்றினார்கள்' திருத்தேர் காலை 9 - 30 மணிக்குப் புறப்பட்டது. சமயப்பயிற்சியாளர்களும், பக்தர்களும் பொதுமக்களும் கூடிநின்று வடம் இழுத்தார்கள். சிலரின் செயலில் வேண்டுதலை நிறைவேற்றும் எழுச்சி கண்டேன்; சிலரின் செயலில் வேண்டிக்கொள்ளும் ஆர்வம் கண்டேன். ஆண்டவன் முன்பு நாம் அனைவரும் ஒன்றே எனும் எண்ணத்தில் அன்று திருத்தேர் கோலாகலமாகத் திருவீதி உலா வந்தது கண்கொள்ளாக்காட்சியாகும்.

அன்று மாலை வில்லிபுத்தூரார் திருநாள் வழக்காடு மன்றமாக மலர்ந்தது. "காப்பிய நோக்கில் கர்ணன் குற்றவாளி" என்பது வழக்கு. மகாவித்துவான். திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் நடுவர் பொறுப்பேற்றார்கள். வழக்காடு மன்றத்தின் போக்கில் அன்று ஒரு புதுமை கண்டேன். கர்ணனை விமர்சிக்கும் போக்கில் தனிப்பட்ட எவரைப்பற்றிய விமர்சனமும் வேண்டாம்; ஏனெனில் அது சிலரின் விமர்சனத்திற்கு ஆளாக நேரும் எனும் நடுவரின் அன்புக் கட்டளையில் அந்த மன்றம் நயத்துடன் காட்சி அளித்தது. வழக்காடிய திரு. கோ. சாரங்கபாணி அவர்களும், திரு, இரா. செல்வக்கணபதி அவர்களும் நாகரிகம் குறையாமலும் சாதுர்யமாகவும் கைவந்த நிலையில் வழக்காடினார்கள். நடுவர் தீர்ப்பில், "கர்ணன், தன் தாய் குந்தி தன்னைவந்து கூப்பிடும் பொழுதும் செல்லாமல் துரியோதனன்பக்கம் இருந்தமையே அவன் சிறப்பிற்கும் நன்றியுணர்விற்கும் எடுத்துக் காட்டாகும்" என்றுகூறி கர்ணன் குற்றவாளி இல்லை என்று தீர்ப்புக் கூறினார்கள்.

பத்தாம் திருநாள் — குருபூஜைத் திருநாள். காலை 8 மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆன்மார்த்த

மூர்த்தியாம் ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்குத் தினந்தோறும் நிகழ்த்தும் வழிபாட்டினை அன்று மிகச் சிறப்பாக நிகழ்த்தியருளினர் கள். அன்பர்கள் பலரும் வந்து வணங்கி உய்ந்தார்கள் அன்று காலையில் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் திருநீறு, உருத் திராக்கம், ஐந்தெழுத்துபோன்ற அரியசெய்திகளைப்பற்றி அறிஞர்கள் பலர் உரையாற்றினர்கள். குருபூஜை விழா மலராக மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் எழுதிய "சைவ சித்தாந்தம்" எனும் நூல் வெளியிடப்பெற்றது. காலை 11-30 மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ ஞானம்பிகை உடனுகிய ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலுக்கு எழுந்தருளி, சிறப்பான அபிஷேக ஆராதனைகளுடன் வழிபாடாற்றினர்கள். மாலை 5 மணி அளவில் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் டாக்டர். திரு. சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் போன்ற பெரியோர்கள் பலரும் அரிய தலைப்பில் உரையாற்றினர்கள்.

மாலை 6-30 மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் காவிரித்திருமஞ்சனத்திற்கும் குருமூர்த்தவழிபாட்டிற்கும் அடியார்கள் புடைசூழ எழுந்தருளினர்கள். அக்காட்சி உண்மையில் காணக் கிடைக்காத காட்சி ஆகும். தருமையில் இம்மாதிரியான விழா ஆண்டுதோறும் குறைவற நடைபெறவேண்டும் என்று அங்கிருந்த நல்லிதயங்கள் ஏங்கின என்பதனை நன்கு புரிந்துகொண்டேன். இறைவன் நல்லோரின் எண்ணத்தை ஈடேற்றுவான் ஆதலின் கவலை யில்லை பின்னர் அன்று இரவு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அடியார்கள் பலருக்கும் கொலுவீற்றிருந்து அருட்காட்சி வழங்கிப் பிரசாதம் அருளினர்கள். திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் காசிவாசி ஸ்ரீமத். முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தம் குருநாதருக்குக் கொலுவழிபாடுசெய்வித்து மகிழ்ந்தார்கள். அக்காட்சி இன்னும் என் கண்முன்பு நிழலாடுகிறது.

மறுநாள் பதினெராம் திருநாள் - பட்டணப்பிரவேசத் திருநாள் - காலை 8 மணி முதல் அறிஞர்கள் பலர் தெய்வத் தமிழ் மன்றத்தில் உரையாற்றினர்கள். மாலை 6 மணி அளவில் சமயப் பயிற்சி வகுப்பு நிறைவு விழா நடைபெற்றது. நாகப்பட்டினம் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை துணை ஆணையர் திரு. ஆர். தண்டபாணி அவர்கள் தலைமை ஏற்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாசியோடு சான்றிதழ்களைப் பயிற்சியாளர்களுக்கு வழங்கினர்கள். இரவு மணி 7 க்குத் தருமையாதீன இசைப்புலவர் சீகாழி திரு. எஸ். கோவிந்த ராஜன் அவர்கள் குழுவினரின் இன்னிசை நடைபெற்றது. சம்பிர தாயத்திற்கு மாருமல் இசைபாடக்கூடியவர் இசைமணி என்பது ஒவ்வொரு ஆண்டும் நிரூபணம் ஆகிவருகிறது சீகாழி திரு. எஸ். கோவிந்தராஜன் அவர்களின் கம்பீரமான சாரீரம் தனி அழகு. அது இறைவனின் அருட்பிரசாதம்.

பின்னர் இரவு 10 மணி அளவில் பெருந்திரளான அடியார்கள் திருக்கூட்டத்துடன் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிவிகையில் பட்டணப்பிரவேசமாக எழுந்தருளினார்கள். திரு. ஏ. கே. சி. நடராஜன் போன்ற சிறந்த குழலிசைக் கலைஞர்களின் மங்களவாத்தியங்களுடன் பட்டணப்பிரவேசம் வெகு விமரிசையாக நடைபெற்றது. நான்கு வீதிகளில் உள்ள பல்லோரும் தங்கள் வீட்டிற்கு முன்னர் பந்தல் அமைத்து மகரதோரணங்கள்கட்டி மின்விளக்கு அலங்காரங்கள் செய்து பூர்ணகும்பம் வைத்து ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களை வரவேற்று வழிபாடாற்றி மகிழ்ந்தார்கள். காசிவாசி சுவாமிகள் அவர்கள் உடனிருந்து பூசித்து மகிழ்ந்தார்கள். கிராமியக் கலைஞர்கள் தங்கள் ஆற்றலை ஒருபக்கம் இருந்து காட்டி அங்குள்ளோரை மகிழ்ச்சியடையச்செய்தார்கள். இங்ஙனம் எல்லாத் தரப்பிலும் அவரவர்கள் தங்கள் சொந்தவிழாவாக எண்ணி மகிழும் வண்ணம் அவ்விழா நடைபெற்றது. பின்னர் இரவு 2 மணி அளவில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவில் அமர்ந்தருளி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கியருளினார்கள்.

இந்த பதினொருநாட்களும் தருமபுரமே தெய்வக்காட்சியுடனும் தெய்வத் தமிழ் முழக்கத்துடனும் இருந்தது. இருவேளைகளிலும் சுவாமி புறப்பாடும் வேதபாராயண முழக்கமும் திருமுறை இன்னிசையும் கண்ணுக்கும் கருத்துக்கும் ஏன்? உயிரின்பத்திற்குமே நல்ல விருந்தாகவும் அருமருந்தாகவும் இருந்தன எனலாம்.

பயிற்சியாளர் ஒருவரை அணுகி நீங்கள் இந்த பதினொருநாட்களும் இங்குத் தங்கி இருந்ததுபற்றி என்ன எண்ணுகிறீர்கள் என்று கேட்டேன். அவர் சொன்னது என்னை நெகிழவைத்தது. "நாங்கள் எங்கெல்லாமோ சென்றிருக்கின்றோம்; ஆனால் இந்தப் பதினொரு நாட்கள் இங்குத்தங்கி இருந்தது வாழ்வில் என்றுமே மறக்கமுடியாதது; நாங்கள் எங்கள் ஊருக்குச் சென்றுவிட்டபின்னரும் காலை 8-30 மணி என்றால் சுவாமி புறப்பாடும், மங்கல ஒலியும், வேத பாராயண ஒலியும், திருமுறை இன்னிசையும், மாலை 6-30 மணி என்றால் தெய்வத்தமிழ் மன்றத்தின் நினைவும், இரவு 9 மணி என்றால் சுவாமி புறப்பாடும், மங்கல ஒலியும், இங்ஙனம் நாள்முழுக்க நேரத்திற்கு நேரம் நினைத்துப் பார்க்கும்படி இந்தநாட்கள் அமைந்துவிட்டன. ஆகா! மறக்கமுடியுமா இந்தநாட்களை! என வியந்துநின்றார்.

நான் நினைத்தேன்; நம்நாட்டில் இன்னும் அறம் இருக்கிறது; அற எண்ணங்கள் இருக்கின்றன; அதற்கு இதுபோன்ற விழாக்கள் ஆண்டுக்கு ஆண்டு வளரவேண்டும்; வளர ஆண்டவன் அருள் வேண்டிப் பிரார்த்திக்கிறேன்.

# அறம் கூறும் அரிய நூல்கள்

பேராசிரியர், திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.,

(சென்ற இதழின் தொடர்ச்சி)

**பூவாவது காய்க்கும் மரம் :**

இவ்வுலகில் சிலர் வயதில் மிகக் குறைந்திருந்தாலும் அறிவி லும் சான்ருண்மையிலும் உயர்ந்த நிலையில் இருக்கிருர்களே!; ஞானசம்பந்தர் மூன்றுவயதில் பாடல் பாடினரே! இவற்றிற்கெல்லாம் இவ்வுலகில் காரணம்சொல்ல இயலுமா? இவைபோன்ற எண்ணங்கள் இன்று நம்மிடையே உலா வந்துகொண்டிருக்கின்றன. இவற்றை யெல்லாம் அப்பொழுதே சிந்தித்து விடை கூறுவார் போன்று ஒரு பாடலில் ஆசிரியர் விளக்கம் கூறுகின்ருர்.

பூவாதே காய்க்கும் பலா முதலியன இருப்பதுபோல நன்மையை நன்கு ஆய்ந்தறிவார் வயதில் மூத்திலராயினும் மூத்தாரோடொப்பக் கருதக்கூடியவரே என்றும், நிலத்தில் பாத்திகட்டி விதைக்காமலே முளைக்கிற விதைபோலவே மதியுடையவர்க்குப் பிறர் அறிவிக்காம லேயே அறிவு தோன்றும் என்றும் அருமையான இரண்டு உலகியல் உவமைகளைக் கூறுகின்ருர்.

> "பூவாது காய்க்கும் மரமுள நன்றறிவார்
> மூவாது மூத்தவர் நூல்வல்லார் — தாவா
> விதையாமை நாறுவ வித்துள மேதைக்கு
> உரையாமை செல்லும் உணர்வு" [பா. எ. 22]

என்பது அவர் பாடிய அப்பாடல்.

**எல்லார்க்கும் எல்லாம் எளிதல்ல :**

இவ்வுலகில் மனிதர் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு செயலில் சிறந்து இருப்பார்கள் என்பது ஒத்துக்கொள்ளக்கூடியது. ஆனல் யாரேனும் ஒருவராவது எல்லாச்செயலிலும் வல்லவராக இருப்பாரா என்ருல் ஐயமே! அப்படி யாரேனும் ஒருவர் தன்னல் எல்லாச் செயலும் செய்ய இயலும் என்று தற்பெருமைகொண்டு அலைந்தால் தலையில் ஒரு குட்டு வைப்பதுபோல இவ்வாசிரியர் ஒரு பாடலில் விளக்கம் தருகின்ருர்.

தூக்கணாங்குருவி கட்டும் அழகிய கூடும், எறும்புகள் செய்யும் அரக்கும், புழுக்கள் உண்டாக்கும் நூலும், கோற்புழு தோற்றுவிக்கும் கோற்கூடும், தேனீக்கள் திரட்டும் தேன்பொதியும் யாராலும் மிக விரும்பிக்கூடச் செய்தல் முடியாதன. ஆதலின் யாரும் தன்னால் எல்லாம் முடியும் என்று செருக்கித் திரியாமல் நம்மாலும் இயலாத காரியம் ஒன்று இருக்கும் என்று அடங்கி வாழவேண்டும் என அறிவுறுத்துவது எண்ணி அறியவேண்டுவது.

" வான்குருவிக் கூடரக்கு வாலுலண்டு கோற்றருதல்
தேன்புரிந் தியார்க்குஞ் செயலாகா — தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன வென்னர் ஒரோவொருவர்க்கு
ஒல்காதோ ரொன்று படும் " [பா. எ. 27]

என்பது அப்பாடல்.

**இல்லதென் இல்லவள் மாண்பானல் :**

'வாழ்க்கைத்துணைநலம்' என வள்ளுவரால் தனி அதிகாரம் அமைத்துப்பாடும் பொருட்சிறப்பு உடைய பெண்டிரின் உயர்வினைக் கவிஞர்கள் அனைவருமே பாராட்டத் தவறவில்லை அப்பெண்கள் தங்களுக்கு என்று ஒரு இடம் அமைந்து புகுந்தபிறகுதான் அவர்கள் புடம்போட்டத் தங்கமாக மிளிர்கிறார்கள் என்பதிலும் யாருக்கும் மறுப்பில்லை.

தன் கணவன் வீட்டில் இருந்து நடத்தும் குடும்ப வாழ்வில் அவளின் பங்கு எந்த அளவுக்கு முக்கியத்துவம் பெறுகிறது என்பதனை வள்ளுவர் "இல்லதென் இல்லவள் மாண்பானல்........." என்று கூறுவதிலிருந்து உணரலாம். இவ்வாசிரியரும் அப்பெண்களின் சிறப்பினையும், அப்பெண் எப்படி வாழவேண்டும் என்பதனையும் ஒரு பாடலில் விளக்கிக் கூறுகின்றார்.

தன் கணவரின் வருவாய் அறிந்து வாழ்க்கை நடத்துவது ஒரு பெண்ணின் முக்கிய கடமைகளில் ஒன்று. மேலும் உறவினரை வெறுத்து ஒதுக்காது தழுவியும், விருந்தனரை உபசரித்தும், குடியை உயர்த்தும் தெய்வத்தை வணங்கியும் வாழ வேண்டுவது அப்பெண்ணுக்குச் சிறப்புத்தரும் செயல்களாகும்.

" வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித் — திருவாக்கும்
தெய்வதையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு " [பா. எ. 43]

என்பது அப்பாடல்.

இத்தகைய செயல்கள் எல்லாம் ஒரு பெண்ணுக்கு இன்றியமையாதன என்பதனை இளங்கோவடிகளும், மதுரையில் "எழுகென எழுந்தாய் என் செய்தனை" என்று கேட்கும் கோவலனுக்குப் பதில் கூறும் கண்ணகிகூற்றில் வைத்து விளக்கியுள்ளார் "அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்; துறவோர்க்கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்; விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை..." என்பன இலக்கிய வரிகள். தமிழரின் சிந்தனை தமிழ்மண்ணின் சிந்தனை ஆதலின் ஒன்றுபட்டிருத்தலில் வியப்பில்லைதானே!

**வாழ்க என வாழ்தல் நன்று :**

இவ்வுலகில் எல்லோரும்தான் வாழுகின்றோம்; ஏன்? மரம் செடி கொடிகள்கூடத்தான் வாழுகின்றன. ஆனால் நாம் வாழும் பொழுது பிறருக்கு எள்ளளவேனும் பயன் உண்டா என்று சிந்தித்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். ஒருவீட்டில் ஒருவர் இறந்த அன்று பெருங்காற்றினால் அவ்வீட்டிலிருந்த முருங்கைமரமும் வீழ்ந்தது. அவ்வீட்டில் இருந்தோர் அம்முருங்கைமரம் வீழ்ந்ததற்கு வருந்திய அளவுகூட இவரின் சாவுக்கு வருந்தத் தயாராய் இல்லை என்றால் என்னதெரிகிறது. முருங்கைமரம் பயன்கொடுத்த அளவுகூட இவர் அவ்வீட்டிற்குப் பயன்தரவில்லை. ஆதலின் மனிதராகப்பிறந்த ஒவ்வொருவரும் பயன்பெற்று வாழ்வதற்குக் காட்டும் ஆர்வத்தையும் துடிப்பையும் பயன் கொடுத்து வாழ்வதற்கும் காட்டினால் நன்றாக இருக்கும் விளக்கிச்சொல்லப்போனால் இந்தச் சமுதாயம் எனும் மரத்திலிருந்து பறித்துப் பயன்பெறுவதற்குச்செய்யும் ஆர்ப்பாட்டத்தையும் வேகத்தையும் அந்தமரம் வீழ்ந்துவிடாமல் இருக்கப் பயன்படுத்துகிறோமா என்று ஒருகணம் சிந்தித்தால்போதும். இன்று நாடு இந்தப்போக்கில் போகாது என்பது உண்மை.

இவ்வாசிரியரும் ஒரு மனிதன் எப்படி வாழவேண்டும் என்று ஒரு பாடலில் விளக்குகின்றார். தான் பிறந்த குடியை நினைந்தும், தன்னை ஒழுக்கத்தின் வழுவா நிலையில் நிலைநிறுத்தியும், தான் பிறரால் எண்ணிப்பார்க்கும் தகுதி அடைந்தும், பிறரால் சாவ என்று வைய வாழாது வாழ்க என்று வாழ்த்த வாழ்ந்தும்வருவதே ஒரு மனிதனுக்குச் சிறப்புத்தருவதாகும் என்கின்றார்.

"தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து — தான்பிறரால்
சாவவென வாழான் சான்றோரால் பல்யாண்டும்
வாழ்கவென வாழ்தல் நன்று" [பா. ௬. 68.]

பது அப்பாடல்.

'பாம்பு அணிந்த சடையர்' என்ற தொடர் 'பாம்புகளை அணிந்த சடையை உடையவர்' என்ற பொதுப்பொருளைக் கொண்டது எனினும், 'கேது அன்போடு செய்த பூசனைக்கு உகந்த திருக்கோலம் காட்டிய சடையழகர்' என்ற குறிப்புப் பொருளை உடையது என்றும் கூறலாம்

ஆளுடைய பிள்ளையாரும், ஆளுடைய நம்பிகளும் இவ்வாறு தனித்தனிப் பதிகம் பாடியருளினர் ஆளுடைய அரசர் பாடிய தனிப்பதிகம் இல்லை: 'கேதீச்சரத்தார்' என்று வைப்புச் சிறப்பை வாக்கரசர் திருவாக்கிற் காண்கின்றோம். 'கருதநின்ற கேதீச்சரம் கைதொழக் கடுவினை அடையாவே' என்பர் பிள்ளையார்.

**ஞானக்கண் காட்சி:**

'காலம் இடையிட்டவற்றையும் தேயம் இடை யிட்டவற்றையும் காணும் **ஞானக்கண்ணுடைமையினால்** கற்றோரைக் **கண்ணுடையர்**' என்று திருவள்ளுவர் கூறினர் என்றெழுதும் பரிமேலழகரின் உரைப் பகுதி இப்பெருமக்களுக்கிருந்த ஞானக்காட்சியை இனிது உணர்த்துவதாக உள்ளது. ஆம் தம்முடைய '**அகத்திற் கண்கொண்டு கண்டு**' அந்த மகிழ்ச்சியை இனிய பதிக மலர்மாலையாக அப்பெருமக்கள் செய்துள்ளனர்.

'கனைகடல் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்'

'வாழையம்பொழில் மந்திகள் களிப்புற மருவிய மாதோட்டம்'

'வண்டு பண்செயும் மாமலர்ப் பொழில் மஞ்ஞை நடமிடு மாதோட்டம்'

'கடல்வாய் அப்பொன்னிலங்கிய முத்துமாமணிகளும் பொருந்திய மாதோட்டம்'

'மாவும் பூகமும் கதலியும் நெருங்கு மாதோட்ட நன்னகர்'

'மன்னு பாலாவியின் கரையிற் கேதீச்சரம்'

'மாடெலாம் மணமுரசுஎனக் கடலினது ஒலிகவர் மாதோட்டம்'

என்ற இப்பகுதிகள் ஆளுடைய பிள்ளையார் தம் திருக்கண்களாற் கண்டு பாடுவன போன்றே அமைந்துள்ளமை காணலாம், 'மாதோட்டம்' என்ற பெயருக்கேற்பப் பெரும்பொழில் சூழ்ந்த இந்நகரில் உள்ள இயற்கை அழகிலும் பிள்ளையார் உள்ளம் பெரிதும் ஈடுபட்டுள்ளது. பாலாவியின் கரைமேல் மந்திகள், மயில்கள் நடமிட்டு மகிழ்கின்ற சோலைகளுடன் இன்றும் இத்தலம் விளங்குவது கண்கூடு.

கடலின் ஒலி மணமுரசு ஒலிபோன்று முழங்கிக்கொண்டே இருக்கின்றது.

'பாலாவியின் கரைமேல் திடமா உறைகின்றான்' எனப்பாடும் சுந்தரர் திருவாக்கிலிருந்து பாலாவிக்கரைமீது திருக்கோவில் இருந்திருக்கவேண்டும் என்று கருதலாம். வங்கம் (கப்பல்) மலிகின்ற கடல் என்று வருவதனால், திருக்கேதீச்சரத்தை ஒட்டிய கடற்பகுதியின் வாணிக வளம் இனிது புலனாகும். பொழில்வளம் சுந்தரராலும் பேசப்படுகிறது. 'மாவின்கனி தூங்கும்பொழில்' என்பார்.

[இன்றும் யாழ்ப்பாணத் தமிழில் தூங்குதல் - தொங்குதல் என்ற பொருள் உடையதே; நித்திரை கொள்ளுதல் என்றே உறங்கும்நிலையை அங்குள்ள தமிழ்ப்பெருமக்கள் கூறிவருகின்றனர். 'தூங்கினான்' என்றால் (சயிற்றில்) தொங்கினான் என்ற பொருள் கொள்வதே அங்குப் பெருவழக்கு என்பது அங்குச்சென்று பழகிய அன்பர்கள் அறிவர்.]

பயன்காட்டல்:

திருக்கேதீச்சரத்துப் பெருமானைத் திருப்பதிகங்கள் பாடிப்பரவிய அன்பர்கள், 'பரகதி பெறலாம்' என்றும், 'கொடுவினை கூடா' என்றும் பெருமக்களால் வாழ்த்தப்பெறுகின்றார்கள். வினையினின்று நீங்கி சிவகதி பெறலேயன்றோ வாழ்வின் இலட்சியம்! அது இத்திருத்தல வழிபாட்டால் எளிதாகக் கைகூடும் என்பது மந்திரமொழி அன்றோ!

"நல்லர் ஆற்றவும்; ஞானம்நன் குடையர்; தம்
அடைந்தவர்க்கு அருளீய
வல்லர்; பார்மிசை வான்பிறப்பு இறப்புஇலர்;
மலிகடல் மாதோட்டத்து
எல்லையில்புகழ் எந்தை கேதீச்சரம்
இராப்பகல் நினைந்து ஏத்தி
அல்லல் ஆசறுத்து அரன் அடியிணை தொழும்
அன்பராம் அடியாரே"

என்ற பிள்ளையார் திருவாக்கும் இவ்வடியார்க்கு வரும் பேறுகளனைத்தையும் இனிது உணர்த்துகின்றது. சிவஞான போதத்தின் பதினொன்று பன்னிரண்டாம் சூத்திரப்பொருள் அமைதியாக இத்திருப்பாட்டு அமைந்துள்ளது. 'அயரா அன்பு' உடையார் பேரின்பத்தை எய்தி இன்புறுவதை அன்றோ, 'அன்பராம் அடியார்' என்றனர் பிள்ளையார்!

இவ்வாறே சுந்தரர் ஞானக்கண்ணினிற் கண்டு பாடுகின்ற பதிகத்து ஏழாம்பாடல் நம் அன்றாடப் பாராயணத்திற்கு உரியதாகவும் நினைந்து நினைந்து உருகுவதற்கு உரியதாகவும் உள்ளது.

"ஊனத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருளி
வானத்துறு மலியும்கடல் மாதோட்ட நன்னகரில்
பானத்துறு மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான் திருக் கேதீச்சரத்தானே."

**அருட்செய்திகள்:**

'சிவபெருமானுடைய ஞானசக்தி, கிரியாசக்திகளாகிய இரண்டு திருவடிகளைத் தம்முடைய ஞானக்கிரியா சக்திகளுக்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோல் அடங்கிநின்று மெய்யன்பினுல் இன்புறும் நிலையைப் பெற்றவர்கள் 'சிவஞானிகள்' என்பதும், அவர்கள் மிக நல்லவராய்க் குற்றமற்ற மெய்யுணர்வினை உடையார் என்பதும், தம்மையடைந்த பக்குவர்க்கு முதல்வன் திருவருளை விளங்கச்செய்யும் ஆற்றல் உடையவராய்ப் பிறப்பிறப்பின்றியிருப்பர் என்பதும் இத்தலத்துப் பிள்ளையார் ஞானக்கண்ணுற் கண்டு நம்மனோருக்கு சுட்டும் அருட் செய்திகள். இவற்றை ஓதி உணர்ந்து தெளிதல் சிவநெறியினர் கடன் ஆகும்.

# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமி களின் ஜன்ம நக்ஷத்திரமாகிய ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு 28—6—79 வியாழக்கிழமை திருவாவடுதுறை ஆதீனத்திற்குச் சொந்தமான திருவாவடுதுறை அருள்மிகு கோமுக்தீசுவரர் திருக் கோயிலில் சிறப்பாக நடைபெற்றது.

சுவாமிக்கும் அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. வழிபாட்டின்போது திருபுவனம் திருக்கோயில் திரு முறைப்பணியாளர் திரு. S. தண்டபாணி அவர்களால் திருவாவடு துறைத் தேவாரத் திருப்பதிகங்கள் பாராயணம் செய்யப்பெற்றன. திருப்பதிகங்கள், தலவரலாறு குறிப்புரை முதலியவற்றுடன் கூடிய நூல் வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பெற்றது. வழிபாட்டின் முடிவில் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் திருப்பதிகக் கருத்துக்களை விளக்கி விரிவுரையாற்றினுர்கள், திருக்கோயில் கண்காணிப்பாளர்கள் உடனிருந்து வழிபாடுகள் செய்வித்தனர்.

## ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் குருபூஜை விழா

அன்புநெறியைத் தோத்திரவாயிலாகப் பரப்பியவர்கள் சமயா சாரியர்கள் நால்வராவர். அவர்களுள் முதலாமவர் திருஞானசம்பந்தர். இவரது குருபூஜைத் திருநாள் வைகாசித் திங்கள் 28 ஆம் நாள் (11—6—79) திங்கட்கிழமை தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக் கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை திருஞானசம்பந்த சுவாமிகளுக்கும் ஏனைய சமயாசாரியர்களுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. திருஞானசம்பந்தர் புராணம் படிக்கப் பெற்றது. மாலை 7 மணி அளவில் திரு மு. ஆறுமுக தேசிகர், திரு. வி. சபேசன் ஆகியோர் "திருஞானசம்பந்தர் அருள்வரலாறு பற்றி யும் அவர்காலத்தில் வாழ்ந்த ஏனைய நாயன்மார்கள்பற்றியும்" விரி வுரையாற்றினுர்கள். காலை மாலை இருவேளைகளிலும் ஸ்ரீலஸ்ரீ குரு மகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப்

பிரசாதம் வழங்கியருளினார்கள். இரவு 8 மணி அளவில் ஆதீன ஓதுவாமூர்த்திகளின் திருமுறைப்பாராயணத்துடன் திருஞானசம்பந்தர் திருவீதியுலா நடைபெற்றது. அன்பர்கள் பலர் கலந்துகொண்டு வழிபட்டுப் பயன்பெற்றனர்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் குருபூஜை விழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் 29—6—79 வெள்ளிக்கிழமை சமயாசாரியர்களுள் நான்காமவராகிய ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் குருபூஜைவிழா சிறப்பாக நடைபெற்றது. காலையில் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளும் மாலையில் ஆதீன ஓதுவாமூர்த்திகளின் திருவாசக பாராயணத்துடன் மாணிக்க வாசகர் திருவீதியுலாவும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் காலை மாலை இருவேளைகளிலும் வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கியருளினார்கள். மாலை 6-30 மணி அளவில் திரு மு. ஆறுமுக தேசிகர், திரு வி. சா தருசாமி தேசிகர் எம். ஏ., திரு. மு சிவச்சந்திரன் எம். ஏ., ஆகியோர் 'மணிவாசகர்' 'திருவாசகம்' 'திருக்கோவையார்' என்ற தலைப்புக்களில் விரிவுரை யாற்றினர். அன்பர்கள் பலர் வழிபட்டும் விரிவுரைகளைக்கேட்டும் பயன் பெற்றனர்.

## ஸ்ரீ மகாமாரியம்மன் தீமிதி உற்சவம்

தருமபுரத்தின் வட கீழ்த்திசையில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளி இருக்கின்ற ஸ்ரீ மகாமாரியம்மைக்குத் தீமிதி உற்சவம் 7—6—79 அன்று தொடங்கி ஐந்துநாட்கள் சிறப்பாக நடைபெற்றது. விழா நாட்களில் அம்மைக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகளும் திருவீதியுலாவும்நடைபெற்றன. 11—6—79 அன்று மாலை தீமிதி உற்சவமும், இரவு திருத்தேரில் ஸ்ரீ அம்பாள் திருவுலாக்காட்சியும் நிகழ்ந்தன. இந்நாட்களில் இரவு மகாமாரியம்மன் தாலாட்டுப்பாடல் நிகழ்ச்சிகளும் "லவ குசா" நாடகமும் நடைபெற்றன.

## ஆச்சாள்புரத்தில் திருக்கல்யாணப் பெருவிழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத் தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் 10—6—79 ஞாயிற்றுக்கிழமை மாலை ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிக்கும் ஸ்ரீ தோத்திரபூர்ணாம்பிகைக்கும் திருக்கல்யாணப் பெருவிழா சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை ஸ்ரீ திருஞானசம்பந்தருக்கு உபநயனமும், மாலையில் மாலைமாற்று ஊஞ்சல், திருக்கல்யாணம்

முதலியனவும் நடைபெற்றன. தொடர்ந்து திருஞானசம்பந்தர் திருக் கல்யாண கோலத்துடன் புஷ்பப்பல்லக்கில் திருவீதியுலாவருதலும் பேரின்பப்பேறளிக்கும் திருப்பதிகம் ஓதுதலும், இரவு 4 மணிக்கு மேல் 6 மணிக்குள் சிவஜோதி தரிசனமும் நிகழ்ந்தன.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருக்கல்யாணப் பெரு விழாவிற்கு எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள். பக்தர்கள் திரளாகக் கூடியிருந்து விழா விணைத் தரிசித்துப் பயன்பெற்றனர்.

அன்று மாலை 6 மணி அளவில் தேவார வகுப்பு ஆண்டு விழா நிகழ்ந்தது. தருமை ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் புலவர் திரு. இரா செல்வக்கணபதி எம். ஏ., அவர்கள் ' திருஞான சம்பந்தர் திருமணம் ' என்னும் தலைப்பில் விரிவுரையாற்றித் தேவார வகுப்பு மாணவ மாணவியருக்குப் பரிசுகளை வழங்கினார்கள். அன்பர்கள் பலர் விரிவுரையைக் கேட்டுப் பயன்பெற்றனர்.

---

# அன்னை அருள்மாலை

திருமுறைக்கலாநிதி

வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.

கைத்தலம் கூப்பியே தொழுகடிக் குளம்நாளும்
கருதுசௌந் தரநாயகி
கபாலிமகி ழுந்திருத் தண்டலை நீணெறி
கண்டுகொள் ஞானம்பிகை
மைத்தடங் கண்ணியர் வழிபடும் கோட்டூர்
மதுரவச னாம்பிகையம்மை
மால்விடை யேறும்பி ரானுறையும் வெண்டுறை
மங்கைவேல் நெடுங்கண்ணியே
சித்தமதிற் குடிகொள்ளும் திருக்கொள் ளம்பூதூர்
திகழ்சௌந் தராம்பிகை
செப்பிடும் திருப்பே ரெயில்ஜகந் நாயகி
திருக்கொள் ளிக் காடுநெஞ்சில்
பத்திசெய் வார்க்கருள் பஞ்சினு மெல்லடி
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற் கருள் அன்னையே. (22)

# எதிர்காலம்


## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.


**சித்தார்த்தி௵ ஆடி௴ 1௳ முதல் 31௳ முடிய.**

**( 17—7—79 முதல் 16—8—79 முடிய )**

| | | | |
|---|---|---|---|
| | சந் | ல செ | சு |
| கே | இராசி | | சூ பு கு |
| | | | சனி ரா |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| சு | சந் | | |
| கே | அம்ஸம் | | ல சூ பு. செ |
| கு | | | சனி ரா |
| | | | |

ஸ்ரீ சித்தார்த்தி௵ ஆனி௴ 32௳ சோமவாரம் அசுவதி நக்ஷத்திரம் கௌலவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 53 நாழிகை 21 விநாடிக்கு ரிஷபலக்னத்தில் கடக நவாம்சையில் ஸ்ரீ லோகரட்சகரான சூரிய பகவான் மிதுன ராசியிலிருந்து கடகராசி சங்கிரமணமாக ஆடிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று தட்சிணாயன புண்யகாலமாகும். மறுதினம் மங்களவாரம் ஆடி௴ முதல் தேதியாகிறது ஸஸ்யாதிபதி செவ்வாய் பகவான் ஆகின்றார். சங்கிரம கால கிரகஸ்திதியின் பலனாவது உலகில் எங்கும் பரவலாக மழைபெய்து செம்மண் பூமியில் வளம்மிகும். தேச வர்த்தகங்களில் வெங்காயம், புளி, சர்க்கரை, எண்ணெய், கடலை, துவரை இவற்றின் விலை அதிகரிக்கும். பூண்டு மிளகாய் தனியா இவற்றின் விலை குறைந்து காணும். தங்கம் வெள்ளி விலை ஏற்ற இரக்கமின்றி இருந்து வரும். லோகநாடுகளில் ஆளுநர்களால் நல்லாட்சி நடந்து சகலமான ஜனங்களுக்கும் ஜீவனத்திற்கான வழிதுறைகள் ஏற்படும். அத்தியாவசியப் பொருள்களின் விலைவாசி ஏற்றத்திற்கேற்ப பிரஜைகளுக்குப் பொருளாதார சௌகரியங்கள் ஏற்படும்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் தெய்வீகத் திருத்தோற்றமாக அவதாரமாகி வந்துள்ள மகத்துவ பரம ஞானசாரியர்களாகிய சிவஞான குருமகான்கள் சிஷ்ய கோடிகளுக்கு ஞான உபதேசம் செய்தும் லோகத்திற்கு நல்வழிகாட்டியும் அருள்வார்கள். குருவருள் வழியில் இவ்வுலகம் இயங்கும். தேசங்களில் எங்கும் தேவ ஆலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் சிறப்புப்பூசைகள் நடைபெற்றுவரும் லோகத்தில் எங்கும் தர்மங்களும் அரசநீதி பரிபாலனங்களும் செம்மையாகநடைபெற்றுவரும். எல்லாப் பிரஜைகளும் ஈஸ்வர பக்தியுடையவர்களாகி, கிரியா மேன்மையுடன் க்ஷேமகரமாக வாழ்வார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி - கார்த்திகை $\frac{1}{4}$**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கெடியான தோரணைக்கேற்ப வந்துகொண்டிருக்கும் வஸ்திராபரணங்கள் சேரும், வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் நாளுக்குநாள் முன்னேற்ற ஸ்திதியாக இருந்துவரும். வாகன சுகம் திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். 13உ ஆனல் திட்டமிட்ட காரியங்கள் சிறப்பாக நடைபெறுதல் ஆகும். ஆடிமீ 17உ 15 நாழிகை 27 விநாடிமுதல் 19உ 30 நாழிகை 14 விநாடிவரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**2, ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் நல்ல விதத்தில் பண வருமானங்களை ஏற்படுத்திக்கொண்டிருக்கும் இரத்தின பூஷணங்களையளிக்கும். பூமி இயந்திரங்களில் விருத்திபலனை ஏற்படுத்தும். பெற்ருேர் தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். 13உக்குமேல் எல்லாப் பிரச்சினைகளிலும் மௌனமாக இருந்து காரியங்களைச் சாதித்துக் கொள்ளுதலே நன்மையானதாகும். ஆடிமீ 19உ30நாழிகை14விநாடிமுதல்21உ39நாழிகை 59 விநாடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் கண்ணியமாக வந்துகொண்டிருக்கும். பூமி இயந்திரங்கள் சம்பந்தமாகச் செலவும் மிகும். சகோதர

ரிடம் அல்லது பெண்வழியினரில் மனஸ்தாபம் வந்து நீங்குவதாகும். வித்துவத்துவம் வியாபாரம் கலைத்துறைகளில் முன்னேற்ற ஸ்திதி ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆடிமீ 21உ 39நாழிகை 59விஞடிமுதல் 23உ 46நாழிகை 38விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடந்துவரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும். முன்பு வரவேண்டியவையும் வந்து சேரும். அதற்கு ஒத்த அவசிய செலவும் ஏற்படும். எல்லாக்காரியங்களும் புனிதம் நிரம்ப செயல்பட்டுக்கொண் டிருக்கும். வீடு வாகனங்களில் முதலீடு ஆகும். புத்திரர்களின் கல்வி கலை தொழில் துறைகளில் முன்னேற்ற ஸ்திதியாகும். தாம்பத்திய வாழ்க்கை சாதாரணமாக நடந்துவரும். ஆடிமீ 23உ 46 நாழிகை 38 விஞடிமுதல் 25உ 52 நாழிகை 30 விஞடி வரையில் சந்திராஷ் டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் கணிசமாக வந்துகொண்டிருக்கும். சகோதரர் சகோதரிகளின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் விளம்பரம் முதலாகிய செலவுகள் இருப்பினும் மேன்மையை ஏற்படுத்தும். புத்திரனின் தொழிலில் மாறுதல் சம்பவிக்கும். தாம்பத்திய வாழ்க்கை சுமுகமாக நடந்துவரும். ஆடிமீ 25உ 52 நாழிகை 30 விஞடி முதல் 27உ 59 நாழிகை 45 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$

( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் பல விதத்தில் வந்துகொண் டிருக்கும். 10உக்குமேல் நூதனவஸ்து பிராப்தி வாகனப்பிராப்தி ஆகியவற்றை யளிக்கும். ஜீவனேபாயத் தொழில்களில் 18உக்கு ஸ்லாக்கியபலன் ஏற்படும். புத்திர பிராப்தி ஒன்று ஏற்படுதல் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சந்தோஷம் நிலவும். ஆடிமீ 27உ 59 நாழிகை 45 விஞடிமுதல் 30உ 10 நாழிகை 45 விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ - சுவாதி - விசாகம் $\frac{3}{4}$

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் நற்பலனை அளித்துவரும். குடும்பாபி விருத்தியில் தனவருமானங்கள் சீராக இருப்பினும் எல்லா சம்பிரதாய காரியங்களும் நிற்காமல் நடைபெற்றுக் கொண்டிருக்கும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். பூமி கட்டிடம் இவற்றில் விவாதம் வந்து பின்னர் சரிபடும். வித்துவத்திலும் அரசாங்கக் காரியங்களிலும் நற்புகழ் ஏற்படும். ஓர் தீர்த்த யாத்திரா பலனையளிக்கும். தாரபுத்திரர் களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஆடிமீ 3, 4, 30, 31 தேதிகள் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடந்துவரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கௌரவத்திற்கு ஏற்ப வந்து சேரும். சகோதரருக்கு நலன் கள் பல ஏற்பட்டுவரும். வித்து வத்துவம் கலைத்துறையில் நல்ல நிலைமையை உண்டுபண்ணும். பூ பொருளில் ஓர்வழக்கு ஏற்படச் செய்யும். 13உக்கு மேல் போக்குவர வில் ஓர்விபத்து வந்து தப்பும். ஆடிமீ 5உ 8 நாழிகை 20 விஞடி முதல் 7உ 31 நாழிகை 24 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் போதிய பண வருமானங்கள் வந்துகொண்டிக்கும். சகோதரர் புத்திரர்களுக்குத் தேகநலிவு ஆகி உடன்குணமாகும். வீடு வாகனங்களில் 10உ அளவில் அதிக சௌகரியம் ஏற்படும். பந்து அம்மான்கள் நலனில் ஈடுபாடு ஆகும். எழுத்து மூலகாரியங்களில் பொதுநல சேவையில் சுமுகம் நிலவும். ஆடிமீ 7உ 31 நாழிகை 24 விஞடி முதல் 9உ 59 நாழிகை 10 விஞடி வரையில் சந்திராஷ் டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் சுமார் பலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் எல்லா பிரச்சினைகளையும் சரிசெய்து

கொள்ளும் அளவிற்கு வந்துகொண்டிருக்கும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வயிற்றில் வலி இரத்தவாந்தி போன்ற நலிவு ஏற்பட்டு உடன் குணமாகும் தாம்பத்திய வாழ்க்கை சாதாரணமாக நடந்துவரும். 13உ முதல் ரோகம் நீங்கும் எல்லாக் காரியங்களும் வெற்றியுடன் நடந்துவரும். ஆடிமீ 9உ 59 நாழிகை 10 விஞடி முதல் 12உ 27 நாழிகை 22 விஞடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾**

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் சுப பலனுக நடந்துவரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கண்யத்திற்கு ஏற்பவந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். வீடுவாகனங்களில் விருத்தி நிலைமையை உண்டுபண்ணும். புத்திரனின் கல்விகலை தொழில்துறைகளில் முன்னேற்றஸ்திதியாகும். 10உ ஆனுல் ஓர் புத்திரபாக்கியம் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் அன்யோன்யம் நிலவும். ஆடிமீ 12உ 27 நாழிகை 22 விஞடி முதல் 14உ 54 நாழிகை 38 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**12. மீனம் :- பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.**

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடந்துவரும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானம் திருப்திகரமாக வந்து கொண்டிருக்கும். சகோதரர் சகோதரிகளின் நலம் நன்ருக இருந்து வரும். 13உக்கு மேல் பூ பொருள் சம்பந்தமாக வழக்கு ஒன்று ஏற்படுதல் ஆகும். புத்திரர்கள் சிலசமயம் கட்டுப்பட்டு நடத்தல் சில சமயம் மாறுபட்டு நடத்தல் காணும். மாதப் பின்பகுதியில் மனைவியின் ஆரோக்கியம் பாதிக்கும் ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம் தரும். ஆடி மாதம் 14உ 54 நாழிகை 38 விஞடிமுதல் 17உ 15 நாழிகை 27 விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.



**மதிப்புரை**

# அருணகிரிநாத அடிகளார் வரலாறு

ஆசிரியர் : புலவர். பி. மா. சோமசுந்தரனுர். வெளியிடுவோர் : பாம்பனடிகளார் நூலகம், இராணிப்பேட்டை 60 பக்கங்கள். விலை ரூ. 1—50. தபாற்செலவு தனி.

அடிகளார் அருளிய வண்ணப்பாக்களின் பெருமையையும் அவர் பெற்ற பேற்றையும் முதலில் விளக்கி, அடுத்து ஆராய்ச்சி என்ற மூன்று பகுப்புக்களில், அடிகளாரின் அவதாரத்தலம், குலம், காலம் முதலியவற்றைப்பற்றி அறிஞர்கள் கூறும் கருத்துமாற்றங்களை எடுத்துக் காட்டி, தமது கருத்தைத் தெளிவுபடக் கூறியுள்ளார் ஆசிரியர். அடிகளார் சிற்றின்பத்தில் திளைத்தவராதலின் பாடல்தோறும் மகளிரை வர்ணித்துள்ளார் என்று கூறுவதைக்காட்டிலும் பட்டினத்து அடிகளாரைப் போல உலகோர் குற்றத்தைத் தம்மேற்சார்த்தி உரைக்கும் மரபுபற்றியது என்று கூறுவதே அறிவுடைமையாகும் என்று ஆசிரியர்கூறி அதற்கு இலக்கண அமைதியும் காட்டியிருப்பது மனம் கொளற்குரியது. சைவத்திருமுறைகள், சைவசித்தாந்த சாத்திரங்கள் ஆகியவற்ரேடு அருணகிரிநாதரின் திருப்புகழ் முரண்பட்டதன்று. திருப்புகழைச் சைவர்கள் திருமுறைப் பாராயணத்தின் முடிவில் ஓதி வருவதால் இவ்வுண்மையை உணரலாம் ஆதலின் இந்நூலின் இறுதிப்பகுதியில் அடிகளாரைச் சைவசித்தாந்தி என்று கூறுவதே பொருந்தும் ; கௌமாரர் என்ரே சாக்தர் என்ரே உரைப்பது தவறுடைத்தாகும் என்பதை எடுத்துக்காட்டியுள்ளார். இத்தகைய சிறந்த ஆய்வுநூல் அனைவரும் படித்தறியத்தக்கதாகும்.

  

# ஆடிமாத ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் 26 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தமது குருமூர்த்திகள் காட்டியருளிய வழியிலேயே தமது ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாளில் பாடல்பெற்ற தலங்கள்தோறும் முறையானவழிபாட்டிற்கு வழிகாட்டிவருகின்ருர்கள். அந்தமுறையில் ஆடிமாதம் ஆயில்யத் திருநாள் வழிபாடு 25—7—79 புதன்கிழமையன்று காலை 10 மணி அளவில் திருவழுந்தூர் ( தேரழுந்தூர் ) அருள்மிகு வேதபுரீசுவரர் திருக்கோயிலிலும், மாலை 6 மணி அளவில் திருத்துருத்தி (குத்தாலம்) அருள்மிகு உக்தவேதீசுவரர் திருக்கோயிலிலும் விசேட அபிடேக ஆராதனைகளும், தலத்திருப்பதிகங்கள் பாராயணமும், சமய விரிவுரைகளும் நிகழும்.

# ஆடி மாதச் சிறப்பு நாட்கள்

17—7—79 செவ்வாய், ஆடிப்பண்டிகை.
18—7—79 புதன், வேளூர், சீகாழி, திருக்கடவூர், திருவையாறு, நாகை முதலிய தலங்களில் ஆடிப்பூர உற்சவாரம்பம்.
19—7—79 வியாழன், வேளூர், தருமபுரம் ஸ்ரீ சண்முகர் கிருத்திகை அபிஷேகம்.
20—7—79 வெள்ளி, வேளூர், திருக்கடவூர் முதலிய தலங்களில் அம்பாளுக்குச் சந்தனலங்காரம், நவசக்தி அருச்சனை. இவ்விதம் ஆடி மாதம் ஒவ்வொரு வெள்ளியிலும் நடைபெறும்.
21—7—79 சனி, மகாப்பிரதோஷம்.
22—7—79 ஞாயிறு, மாத சிவராத்திரி, கூற்றுவ நாயனர் குருபூஜை.
23—7—79 திங்கள், சர்வ அமாவாசை, திருவையாற்றில் இரவு ஸ்ரீ அப்பர் சுவாமிக்குத் தென்கயிலாய தரிசனம், பஞ்சமூர்த்திகள் காட்சி கொடுத்தருளல், தருமையாதீனம் 25ஆவது தருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் கயிலைகண்ட திருநாள், ஆதீன மடாலயத்தில் திருக்கயிலாயமலைத் திருவுருவப்பட ஆராதனை விழா. இரவு வெள்ளி ரதத்தில் திருக்கயிலாய திருவுருவப்படம் திருவீதியுலா.
27—7—79 வெள்ளி, ஆடிப்பூரம், வேளூர், திருக்கடவூர், சீகாழி, திருவையாறு, நாகை, மதுரை முதலிய தலங்களில் ஆடிப்பூர உற்சவ தீர்த்தம்
30—7—79 திங்கள், ருக்உபாகர்மா.
31—7—79 செவ்வாய், வேளூர் பவித்ரோத்ஸவ ஆரம்பம், பெருமிழலைக் குறும்ப நாயனர் குருபூஜை.
1—8—79 புதன், ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர், கழறிற்றறிவார் நாயனர் குருபூஜை. தருமையில் ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனர், சேரமான் பெருமாள் நாயனருடன் திருவீதியுலாக்காட்சி.
3-8—79 வெள்ளி, பதினெட்டாம்பெருக்கு, வரலட்சுமி விரதம்,
4—8—79 சனி கலிய நாயனர், கோட்புலி நாயனர் குருபூஜை.
5—8—79 ஞாயிறு, பிரதோஷம்.
7—8-79 செவ்வாய், வேளூர் பவித்ரோத்ஸவ பூர்த்தி, பௌர்ணமி பூஜை விரதம், மாதபூஜையில் திரட்டுப்பால்.
8—8—79 புதன், காயத்ரீ ஜபம்.
12—8—79 ஞாயிறு, மாயூரம் வடக்குவீதி சியாமளாதேவி புஷ்பாஞ்சலி.
14—8—79 செவ்வாய், காளாஷ்டமி, திருக்கடவூர் முனீசுவரபூஜை, தருமையாதீனம் 20 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.
15—8—79 புதன், கிருத்திகை விரதம் வேளூர்க்கிருத்திகை, தருமபுரம் ஸ்ரீ சண்முகர் கிருத்திகைஅபிஷேகம், சுதந்திரதினம், மூர்த்தி நாயனர், புகழ்ச்சோழ நாயனர் குருபூஜை.
16—8—79 வியாழன், ஆடி அறுதி

---